15.4.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



ஷங்கர்
EXCLUSIVE

தமிழ்ப் புத்தாண்டு ஸ்பெஷல்!

+16 இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்

அட மழை... பரிசு மழை..!

லட்ச ரூபாய் பரிசு!

# சிவாஜி ரகசியங்கள்..!

22.4.2007
இதழ்...

# கல்கி





கல்கி
நிறுவன வெளியீடு
தரம் நிரந்தரம்

குடும்பத்துடன் படிக்க...

+16

# பாரத விலாஸ்

# விடுதியே வீடு!




AMMAN LADIES HOSTEL
(a bond of trust & love)

ஹேப்பி
ஹாஸ்டல்
லை..ஃப்

கோடை விடுமுறை காலமிது. இனி கொஞ்ச நாட்களுக்குத் தாய்மார்கள் காலையில் குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பும்போது டென்ஷனாகத் தேவையில்லை. ஆனால், 'வீட்டில் உட்கார்ந்து குழந்தைகள் அடிக்கும் லூட்டிகளையும் சேட்டைகளையும் பொறுக்க முடியாதே' என்கிற புலம்பல்கள் ஆரம்பமாகிவிடும்.

'லூட்டி அடிக்குதா குழந்தை, உடனே அதற்கு ஒரு டூட்டி கொடுங்க'ன்னு ஏதாவது டியூசனுக்கு அனுப்ப நினைத்தால், ஒரு நிமிஷம்... குழந்தைகள் தொடர்ந்து பள்ளிப் பாடங்களையே படிக்கும்போது, குறிப்பாகக் கட்டாயத்தாலோ, விருப்பமில்லாமலோ படிக்கும்போது, படிப்பின் மீது வெறுப்பும், அலட்சியமும் வந்துவிடும். மூளைச் சோர்வு உண்டாகும். இதனை நீங்கள் உருவாக்க வேண்டுமா?

கோடை விடுமுறை என்பது பள்ளிப் பருவத்தில் பல சுவையான நினைவுகளைச் சேகரித்த காலகட்டமாக பல பெற்றோருக்கும் இருக்கும் என்பதை மறுக்க முடியுமா? பிறகேன் அந்த வாய்ப்பை குழந்தைகளுக்குக் கொடுக்க மறுக்கிறீர்கள்? எந்த விடுமுறையும், விழாக்களும் நம் மனதுக்கு புத்துணர்வு ஊட்ட ஏற்படுத்தப்பட்ட ஏற்பாடே.

- பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகளின் பெற்றோரா? குழந்தைகளுடன் அமர்ந்து கதை சொல்லுங்கள். பாரதியார், பாரதிதாசன் என்று பலரின் கவிதைகளை வாசிக்கச் சொல்லுங்கள். அல்லது வாசித்துக் காட்டுங்கள். பெரும் தலைவர்களின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்க வையுங்கள். இது குழந்தைகளின் மனத்தில் நல்ல விஷயங்களையும், சிந்தனைகளையும் விதைக்கும். அவர்களோடு வெளியே செல்லுங்கள். சினிமா, பீச், பார்க்கை மட்டும் எல்லைகளாக வைத்துக் கொள்ளாமல் மியூசியம், கோளரங்கம், வரலாற்று நினைவிடங்கள் போன்றவையும் உங்கள் லிஸ்ட்டில் இருக்கட்டும். நேற்றைத் தெரிந்துகொள்வதில் என்றைக்கும் ஆர்வம் குறையப் போவதில்லை.

- சின்னச் சின்ன வேலைகளை உங்கள் குழந்தைகளையே செய்யச் சொல்லுங்கள். அது சமையல், தோட்ட வேலை, தையல் என்று என்ன வேண்டுமானாலும் இருக்கட்டும். இது குழந்தையின் மனதில் நம்பிக்கையை வளர்க்கும். உடற்பயிற்சியாகவும் அமையும்.

- பத்து வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு வாழ்க்கைக்குப் பயனுள்ள கல்வியைக் கற்றுக் கொடுங்கள். பூ வேலைகள், கூடை பின்னுதல், பெயிண்டிங், கார்பெண்டரி, ஆபத்தில்லாத எலெக்ட்ரிக் வேலைகள்... எனப் பல விஷயங்கள் நாளை அவர்களுக்கு உதவும்.



● உங்கள் வீட்டுக்கு அருகில் சேவை அமைப்புகள் ஏதேனும் இருந்தால், அவர்களுடைய செயல்பாட்டில் உங்கள் குழந்தைகளைப் பங்குபெறச் செய்யுங்கள். இது குழந்தைகளிடையே நல்லுணர்வை வளர்ப்பதோடு, உலகின் மற்றொரு முகத்தைத் தெரியப்படுத்தும், வாழ்க்கையின் கஷ்டங்கள் புரியும்.

● ஒரு குழந்தை பன்னிரண்டு வயதிலிருந்து பதினேழு வயது வரை எப்படி உருவாக்கப்படுகிறதோ, எவற்றை உள்வாங்குகிறதோ அப்படித்தான் நாளை அது உருவாகும். ஆகையால் இந்தக் காலகட்டத்தில் நல்ல விஷயங்களை மனத்தில் விதைக்கப் பெற்றோர்களே, உங்களுக்கு இது அரிய சந்தர்ப்பம். அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

● மனப் புத்துணர்ச்சிக்கும், கோடையைக் கொண்டாடவும் நீண்ட டூர் போக முடியவில்லை என்றாலும் சின்னதாக ஒரு பிக்னிக்காவது குழந்தைகளை அழைத்துச் செல்லுங்கள்.

● கண்டிப்பாகத் தொலைக்காட்சியை நீண்ட நேரம் காண அனுமதிக்காதீர்கள். அந்த நேரத்தில் வேறு விஷயங்களைச் செய்யச் சொல்லுங்கள். படமும் ஒரு பொழுது போக்குதானே என்கிறவர்கள், நீங்களே நல்ல திரைப்படங்களைத் தேர்ந்தெடுத்து குழந்தைகளுக்குக் காண்பியுங்கள்.

- சுகந்தி ஜி.பாரதி

# லீவு...

## சம்மரை பயனுள்ளதாக்க பெற்றோருக்கு யோசனைகள்!





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்**
**எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# சிவாஜி

தமிழ்ப் புத்தாண்டில் ரஜினி ரசிகர்களிடையே மிகுந்த எதிர்பார்ப்பை ஏற்படுத்தியிருந்தது சிவாஜி ரிலீஸ். அதனாலேயே தியேட்டர் கிடைக்காமல், பல தயாரிப்பாளர்கள் படங்களின் ரிலீசை வேறு தேதிக்கு மாற்றினார்கள். ஆனால் சிவாஜி மே மாதம்தான் திரைக்கு வருகிறார். எதிர்பார்ப்புகளின் எல்லை நம்மையும் எகிறவே, படத்தின் இயக்குனர் ஷங்கரைச் சந்தித்தோம். பிஸியான சூழ்நிலையிலும் அழகாகப் பதில் சொன்னார். இதோ...

*'சிவாஜி' பட 'ஸ்பார்க்' எப்போது, எங்கே கிடைத்தது?*

''என்னைச் சுற்றி நடப்பவற்றில் சில விஷயங்கள் மனத்தில் ஆழமாகப் பதிந்து விடும். அவற்றில் ஒன்றுதான், 'ஒருவர் நல்லது செய்ய வேண்டும் என்று நினைக்கிறபோது, அவருக்கு உதவி செய்ய, ஆதரவாக யாரும் இருப்பதில்லை. ஆனால், அதைத் தடுப்பதற்கும், கெடுப்பதற்கும் நிறைய பேர் இருக்கிறார்கள், என்பது. இதுதான் 'சிவாஜி' படத்துக்கு எனக்குக் கிடைத்த ஸ்பார்க். அந்நியனுக்குப் பிறகு என்ன படம் பண்ணுவது என்று யோசித்துக்கொண்டிருந்த சமயத்தில் இந்த ஸ்பார்க், ஒரு கதையாக என் மனத்தில் விரிவடைந்து உருவானது.''

*எப்போதுமே உங்கள் படத்தைப் பற்றிய தகவல்கள் படு ரகசியமாக வைக்கப்படுவது ஏன்?*

''படம் பார்க்கிறபோது ரசிகர்களுக்கு

# ரகசியங்கள்...

அது புதியதாகவும் பிரமிப்பூட்டுவதாகவும் இருக்க வேண்டும். கதை டிஸ்கஷனிலிருந்து ரிலீஸ் ஆவது வரை பல மாதங்கள் ஆகின்றன. படத்தின் கதை, அதில் வரும் காட்சிகள், புதுமைகள் எல்லாம் ரசிகர்களுக்கு முன்கூட்டியே தெரிந்துவிட்டால், அதன்பின் படம் பார்க்கிறபோது, எல்லாமே பழசாக இருக்கும். இந்த உணர்வை ரசிகர்களுக்குக் கொடுத்து விடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறேன்.

**'சிவாஜி'யில் ரஜினி இளமையாக இருக்கிறாரே...**

"ஒரு நடிகரை படத்தில் நடிக்க வைக்கும்போது அவருடைய ப்ளஸ் பாயிண்ட்ஸ் என்னவென்று ஆராய்ந்து பார்த்து அவற்றைப் படத்தில் முன்னிலைப் படுத்த வேண்டும். அவர் நடித்த படங்களிலிருந்து சுமார் ஐந்நூறு ஸ்டில்களைச் சேகரித்து, ஒவ்வொன்றையும் பல்வேறு கோணங்களிலிருந்து பார்த்து, மிகச் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்தேன். அவற்றை நுணுக்கமாக அலசியபோது, ஒரு கட்டத்தில் இலேசாகக் கலைந்திருந்த தலையை, ஸ்டைலாக வகிடு எடுத்து வாரிய ஸ்டில், என்னை மிகவும் கவர்ந்தது. அப்படிப்பட்ட இளமைத் துடிப்புடன் கூடிய வசீகரமான ரஜினியை இப்போது மீண்டும் திரையில் கொண்டு வரத் தீர்மானித்தேன். ரஜினியிடம் நிறைய மாற்றங்கள் கொண்டு வந்தாலும் ரசிகர்கள் ஏற்றுக் கொள்ளாமல் போகும் ஆபத்து உண்டு. அவருக்குப் பொருத்தமாக 'விக்' தேவைப்பட்டது. பத்துப் பதினைந்து விதமான விக்குகளைப் பொருத்திப் பார்த்தும் திருப்தி ஏற்படவில்லை. 'என்னடா நாம் நினைத்தது வரலையே' என்று நொந்துபோன வேளையில், ஒரு விக் மிகப் பொருத்தமாக அமைந்து, எங்களுக்கு உற்சாகமூட்டியது. ரஜினியிடம், 'நீங்கள் இன்னும் கொஞ்சம் சதை போட்டால் கதாபாத்திரத்துக்குப் பொருத்தமாக இருக்கும்' என்று சொன்னபோது, அவர் உடற்பயிற்சிகள் மற்றும் உணவில் சில மாற்றங்களைச் செய்து, இலேசாகச் சதை போட்டார். அவ்வப்போது 'இப்போது உடம்பு எப்படி இருக்கிறது? இது போதுமா? இன்னும் கொஞ்சம் குண்டாக வேண்டுமா?' என்று கேட்டு ரஜினி தம்மை முழுமையாகப் ஈடுபடுத்திக் கொண்டது மிகவும் ஆச்சரியமாக இருந்தது."

**மிக உயரமான அந்தஸ்தில் சூப்பர் ஸ்டார் எனும் பீடத்தில் இருக்கிறார் ரஜினி. இயக்குநர் என்ற முறையில் அவரிடம் வேலை வாங்குவது சிரமமாக இருந்ததா?**

படம்: ஸ்ரீஹரி



தமது சூப்பர் ஸ்டார் அந்தஸ்து, அவருக்கும், யூனிட்டில் உள்ள மற்றவர்களுக்கும் இடையில் திரையாக இருந்து, மற்றவர்கள் தம்மை நெருங்கி ஏதாவது சொல்வதற்கோ ஏதாவது கேட்பதற்கோ, எந்த ஒரு சங்கடத்தையோ, அசௌகரியத்தையோ, தயக்கத்தையோ கொடுத்துவிடக் கூடாது என்பதில் அவர் மிகவும் கவனமாக இருந்

தார். என்னிடம் ஆரம்பத்திலேயே, 'நான் இந்தப் படத்தில் நடிக்கிறேன். என்னை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம்' என்று கூறி சுதந்திரத்தைக் கொடுத்துவிட்டார். அவரது அனுபவம், மெச்சூரிட்டி மற்றும் சினிமாவுக்கான அவரது அர்ப்பணிப்பின் வெளிப்பாடுதான் இது என்பதில் சந்தேகமே இல்லை."

*அந்தச் சுதந்திரத்தை நீங்கள் படத்தில் முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டீர்களா?*

"பாடல் காட்சிகளில் பயன்படுத்திக் கொண்டேன். சண்டைக் காட்சிகளில் ஒரு இருபது, இருபத்தைந்து வயது இளைஞனைப் போல அவரைப் பயன்படுத்தியிருக்கிறேன். அப்படி முழு சுதந்திரத்தைக் கொடுத்திருக்காவிட்டால், அவரை மொட்டை அடித்துக் கொள்ளும்படி நான் சொல்லி இருக்க முடியாது."

*'சிவாஜி'யில் ரஜினி மொட்டைத் தலையுடன் வருகிறாரா?*

"சில வருடங்களுக்கு முன்னால், ஒரு பத்திரிகையில் ரஜினி உட்பட பல நடிகர்களுக்கு மொட்டை அடித்ததுபோல் தோன்றச் செய்திருந்தது சட்டென்று என் கவனத்தை ஈர்த்தது. இந்தப் படத்தின்போது அது நினைவுக்கு வந்தது. ரஜினியிடம் சொன்னேன். வியந்துபோன அவர், 'நல்லா இருக்குமா?' என்று என்னிடம் ஒரே ஒரு கேள்வியைத்தான் கேட்டார். நான், 'கண்டிப்பா நல்லா இருக்கும்' என்றவுடன், 'அப்படி என்றால் மொட்டை போட்டு விடலாம்' என்று சொல்லிவிட்டார். 'ஜென்டில்மேன்'ல சரண்ராஜிடம் மொட்டை போட வேண்டும் என்றபோது, அவர் தயங்கினார். 'விக் வைத்துக் கொள்ளலாமே?' என்று கேட்டார். மொட்டை போட வேண்டியதன் முக்கியத்துவத்தைச் சொன்ன பிறகுதான் ஒப்புக் கொண்டார். ஆனால், ரஜினி மறுப்பேதும் சொல்லாமல், மொட்டைக்குச் சம்மதித்தபோது, மிகவும் ஆச்சரியப்பட்டேன்."

*பாடல் காட்சிக்காக ஸ்பெயின் நாட்டைத் தேர்ந்தெடுத்ததேன்?*

"ஸ்பெயினுக்குப் போய் பாடலை எடுக்க வேண்டும் என்று திட்டமிடவில்லை. அந்தப் பாடலின் சப்ஜெக்ட் 'ஸ்டைல்'. அதற்காக வழக்கமாக பார்க்காத, மிகவும் 'அப்ஸ்டிராக்ட்' ஆன கட்டடங்களைத் தேடினேன். புத்தகங்களில் நான் விரும்பிய வண்ணம் சில கட்டடங்களின் படங்களைப் பார்த்தேன். அவை ஸ்பெயின் நாட்டில் இருப்பதாக அறிந்து அங்கு சென்றேன். பிறகுதான், ஒரே இடத்திலேயே மொத்த பாடலையும் படம் பிடிக்கும் அளவுக்கு அங்கே லொகேஷன்கள் இருப்பது புரிந்தது. ஆனாலும், ஏழெட்டு இடங்களுக்குப் போய் பாடல் காட்சியினை எடுத்தோம். இது ரசிகர்களுக்கு நிச்சயமாக வித்தியாசமாக இருக்கும்."



**"மொட்டை போட வேண்டும் என்றதும் ரஜினி உடனே தயாராகிவிட்டார்!"**

பிரம்மாண்டத்தின் மீது உங்களுக்கு அப்படி என்ன தீராத காதல்?

"எனக்கு ரசிகர்கள்தான் முக்கியம். அவர்கள் என்னுடைய படம் என்றால் பிரமாண்டத்தை எதிர்பார்க்கிறார்கள். நானே ஒரு ரசிகனாகப் படம் பார்த்தாலும் என் எதிர்பார்ப்பு அப்படித்தான் இருக்கிறது. 'ஜென்டில்மேன்' படம் மூலம் என்னை ஒரு டைரக்டராக நிலைநிறுத்திக் கொள்ள பிரம்மாண்டமாகப் படம் எடுத்தேன். அதன் பிறகு எனது படங்களே, பிரம்மாண்டத்தின் அளவுகோலாகி, அதைவிட இன்னும் பிரம்மாண்டமாக இருக்க வேண்டும் என்று யோசித்துப் படம் எடுக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. அந்நியன்தான் இதுவரை எடுத்ததிலேயே பிரம்மாண்டம். அடுத்து ஒரு படம் பண்ண வேண்டுமென்றால் அதைவிட பிரம்மாண்டமாக இருக்க வேண்டுமே! அதற்கேற்ப எடுத்ததுதான் சிவாஜி. நானே, என்னுடைய படங்களைத் திரும்பிப் பார்க்கிறபோது, 'ஓ! நம்மால்கூட இப்படியெல்லாம் எடுக்க முடியுமா?' என்று நினைக்கத் தோன்றுகிறது."

இனி நீங்கள் ஒரு சின்ன பட்ஜெட் படம் இயக்குவது சாத்தியமில்லாத ஒன்றா?

"சாத்தியமா இல்லையா என்பதே இங்கே கேள்வி இல்லை. அதற்கு அவசியமில்லை என்றுதான் சொல்கிறேன்."

'சிவாஜி' பட இசையை விழா நடத்தாமல் நேரடியாக விற்பனைக்கு அனுப்பியதன் பின்னணி என்ன?

"பட பூஜைக்கு ஏராளமாகச் செலவழித்து அழைப்பிதழ் அச்சிடுவது, பிரம்மாண்டமாக பூஜை நடத்துவது, இசை வெளியீட்டு விழா இவற்றில் எல்லாம் எனக்குத் ஆர்வமில்லை. அவற்றை முற்றிலுமாக நிறுத்திட வேண்டும் என்பது என் விருப்பம். ஆனால், தயாரிப்பாளர்கள் ஒப்புக் கொள்வதில்லை. சொந்தப் படத்திலாவது அப்படிச் செய்யலாம் என்றால், கூட இருப்பவர்கள் கட்டாயப்படுத்துகிறார்கள். 'சிவாஜி' பட இசை வெளியீட்டு விழா வேண்டாம் என்று ஏவி.எம்.மில் சொன்னபோது, நான் மகிழ்ச்சி அடைந்தேன். விழா இல்லை என்றால், அந்த நேரத்தை படத்தை மெருகூட்டுவதற்காக செலவிடலாமில்லையா?"

**சிவாஜி காஸ்ட்யூம், டான்ஸ், ஹீரோயின் பற்றி ஷங்கர் அளிக்கும் நுணுக்கமான, சுவையான தகவல்கள் அடுத்த வாரமும் தொடர்கிறது...**

**- எஸ். சந்திரமௌலி**



## புதிய பகுதி

வணக்கமுங்கோ. என்னோட பேரு மதன ராஜன் (இது நானா ஸ்டைலா வெச்சுக்கிட்டது- பெத்தவங்க வெச்சது 'மாயாண்டி'). இந்தக் காதல் நந்தவனத்தோட இன்சார்ஜ் நான்தான் (வாட்ச் மேன்ங்கிற போஸ்டிங்கை தாங்க இப்படி ஸ்டைலா சொல்றேன்... ஹி...ஹி).

மத்த 'பார்க்' மாதிரி இங்கே லவ்வர்ஸை துரத்த மாட்டோமுங்க. அவுங்க தாராளமா வரலாம். மனசுல பட்டதைச் சொல்லலாம். இந்த நந்தவனத்துல என்னவெல்லாம் செய்யப் போறோம்னு ஒரு வெள்ளோட்டம் பார்க்கலாம். வாங்க!

கீழே அஜீத் - ஷாலினி இருக்கறது தான் 'என்ட்ரன்ஸ்' போர்டு. இதுல ஒவ்வொரு வாரமும் காதலிச்சு கல்யாணம் செய்துக்கிட்ட ஒரு ஜோடியோட படத்தை ஒட்டி வைப்போம். இதுக்கு நீங்க அனுப்ப வேண்டியது, உங்க ஜோடியோடு இருக்குற போட்டோ + திருமணம் நடந்ததுக்கான சான்றாக ஒரு நகல்.




நம்ம வாசகர் கிருஷ்ணகிரி **வீ.விஷ்ணுகுமார்** காதலர்களுக்காக பத்து அட்வைஸ் கொடுத்திருக்காரு. பிடிச்சதை மனசுல வெச்சுக்கங்க. மற்றதை அடுத்தவங்களுக்கு மிச்சம் வெச்சுடுங்க.

- பீச்சுல மீட் பண்றப்போ டிஸ்டென்ஸை மெயின்டெய்ன் பண்ணுங்க!
- காதல்ல காட்ற வேகத்தை பைக்ல ஜோடியா போறப்போ காட்டாதீங்க!
- பில்லுல கவனம் வெச்சி செல்லுல பேசிக்கோங்க!
- சிரிச்சி பேசிக்கோங்க, பிறர் சிரிக்கிற மாதிரி வேணாம்!
- தொல்லையில்லாம இருக்க எல்லையோட இருங்க!
- சேட் (chat) பண்ணிக்கோங்க, ச்சீட் பண்ணாதீங்க!
- தம்பி, தங்கச்சிகளை தூது அனுப்பி தூதுவை 'த்தூத் த்தூ' ஆக்கிடாதீங்க!

அடுத்து இப்படி வாங்க. இதுதான் பதில் மேடை. ஒவ்வொரு வாரமும் இங்கே ஒரு கேள்வியைக் கேட்போம். அதுக்கான பதிலை நச்சுன்னு நாலு வரியில சொல்லணும். அந்தப் பதிலுக்கு பரிசு உண்டு.

பதிலை நாலு நாளைக்குள்ளே போஸ்ட், கூரியர்னு எதிலும் அனுப்பலாம். இ-மெயில்ல அனுப்பினா இன்னும் ஃபாஸ்ட்டா கிடைக்கும்.

முகவரி : kalki@kalkiweekly.com

இந்த வாரக் கேள்வி:

**காதலின் முகவரி எது?**

- ஓடி ஓடி காதலியுங்க, ஓடிப் போய்டாதீங்க!
- உயிரைத் தந்து காதலியுங்க, காதலுக்காக உயிரைத் தராதீங்க!
- கல்யாணம் பண்ணிக்கக் காதலியுங்க, கல்யாணம்னதும் காணாமப் போய்டா தீங்க!

காதல், அடி மேல் அடி வைத்து ஒரு பூனை போல மெல்ல வருகிறது. போகும்போது ஒரு யானையாகக் கதவை பலமாக மிதித்துச் சாத்திவிட்டுச் செல்கிறது.

- ராபர்ட் லெம்ப்கே

நம்ம வாசகர் காயக்காடு ப.ராமகிருஷ்ணன், லவ்வைப் பத்தி சில இங்கிலீஷ்மாருங்கோ சொன்ன அது என்ன...? ஆங்... பொன்மொழியைச் சொல்றாரு கேட்டுக்கங்க...

இரக்கம் கதவைத் திறக்கும்போது, காதல் சந்நிதானத்தைப் பிடித்து விடுகிறது.

- புல்லர் லிட்டன்

காதல் ஒரு கண்ணாடிக் குவளை. அதை மிக இறுக்கமாகப் பிடித்தாலோ, உடைந்து நொறுங்கும். மிக மெதுவாகப் பிடித்தால், கை நழுவி உடைந்துவிடும்.

- ரஷ்யப் பொன்மொழி

## ஹைக்கூ கார்னர்

தெரு முழுக்க ஓடும்
நானெழுதிய முத்தம்
மழையில் நனைகிறாய்

- சுந்தரபாரதி



### கமெண்ட் கண்ணையா

காதலை நம்பு
காதலியை நம்பாதே!

உலகம் சுற்றும் காதல் இல்லையேல்
தலையே சுற்றும் காதல் வந்தால்

சென்னையில் இருக்கும்போது ஐ.ஐ.டி.யில் காலை நடையோடுதான் துவங்குகிறது ஸ்டாலினுடைய நாள்.

**கா**லை ஐந்தரை மணிக்கே பரபரப்பாகி விடுகிறது க்ரீன்வேஸ் சாலையிலுள்ள உள்ளாட்சித் துறை அமைச்சர் மு.க.ஸ்டாலினின் வீடு. அமைச்சர் நேரு, மேயர் சுப்பிரமணியம் ஆகியோர் காத்திருக்கிறார்கள். "ஐயா வெளியே வந்துட்டாருங்க" என்று உதவியாளர் சொல்ல, அவர்கள் அவசர கதியில் வெளியே வந்து ஸ்டாலினுடன் காரில் ஏறிக்கொள்ள, அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் ஐ.ஐ.டி. வளாகத்தில் நுழைகிறது கார். நுழைவாயில் தடுப்பைத்



• வாழ்த்தும் வணக்கமும்...



• காலை நேர பயணம்...

தாண்டியவுடன் இறங்கி நடக்கத் துவங்குகிறார் ஸ்டாலின். இப்போது அவரது மருமகன் சபரீசனும், நண்பர் ரெட்டியும் சேர்ந்து கொள்கிறார்கள்.



நாற்பத்தைந்து நிமிடங்கள் நடக்கிறார். கூட வருபவர்களுடன் பேச்சுக் கச்சேரி மிகவும் குறைவு. நடையில் கவனம் செலுத்தி, இலகுவான உடற்பயிற்சிகளை செய்தபடி வருகிறார். அதே சமயம் வணக்கம் செய்பவர்களுக்குப் பதில் வணக்கம் கொடுக்கத் தவறுவதில்லை.

**தி**னசரி அவர் வாக் போகும்போது மாற்றுத்திறன் கொண்ட நபர் ஒருவர், வீட்டிலிருந்தபடியே அவருக்குக் கை காட்டுவாராம். அப்படிக் கைகாட்டி வந்தவரை நாம்

சென்ற அன்று திடீரென்று சென்று சந்தித்தார் ஸ்டாலின். அவர் பெயர் வில்பிரட் வினோத். ஐ.ஐ.டி வளாகத்தில் உள்ள வனவாணி பள்ளியில்தான் படித்தாராம் வினோத். "என் பெண் அங்குதான் படித்தாள்" என்று ஸ்டாலின் கூற, "நல்லாத் தெரியுமே" என்கிறார் வினோத். ஸ்டாலின் வீடு தேடி வந்து விசாரித்ததும் பூரிப்பில் சிலிர்த்துப் போகிறது வினோத்தின் முகம்.



• "சிபாரிசு வேணா பண்றேன்!"



"சீக்கிரம் வந்துடுங்க தாத்தா!"

# இன்பன் எழுந்தாச்சா?

ஏழேகால் மணிக்கு வீட்டுக்குத் திரும்புகிறார் ஸ்டாலின். கூட வந்தவர்கள் விடைபெற்றுச் செல்ல, ஆவி பறக்கும் காபியுடன் பத்திரிகைகளை அலசுகிறார்.

"வெளியூரில் வாக் போகும் வாய்ப்பு கிடைக்கிறதா?" என்று நாம் கேட்க, "நான் அந்த ஊருக்குப் போய்ச் சேரும் நேரத்தைப் பொறுத்தது. கூடியவரை தங்கியிருக்கும் அரசு விடுதியைச் சுற்றியாவது ஒரு நடை நடந்து விடுவேன்" என்கிறார். சமீபத்தில் முதுகுத் தண்டில் அடிபட்டதால் அவதிப்பட்டார் ஸ்டாலின்.

"டாக்டர்கள் மெதுவாகத்தான் நடக்கச் சொல்கிறார்கள். அதிர்ச்சிகளைத் தவிர்க்க வேண்டும் என்று விமானத்தில்கூட போக வேண்டாம் என்று சொல்லி விட்டார்கள்" என்கிறார்.

"ரொம்ப கனமான இலாகாவை கையில் வைத்திருக்கிறீர்களே... எப்படிச் சமாளிக்கிறீர்கள்?"

"அ.தி.மு.க. ஆட்சியில் இந்த

இலாகாவுக்கு மூன்று அமைச்சர்கள் மாறி, மாறி இருந்தார்கள். கடைசியாக இருந்த ஒருவர் கூடுதல் பொறுப்பாக இந்தப் பெரிய துறையை வைத்துக் கொண்டிருந்தார். தலைவர் ஆட்சி வந்தவுடன், இந்தத் துறையில் எல்லா மட்டங்களும் முடுக்கி விடப்பட்டிருக்கின்றன. திறமையான அதிகாரிகள் பணியில் இருக்கிறார்கள். நீலகிரி தவிர, எல்லா மாவட்டங்களிலும் நான் ஆய்வுக் கூட்டங்களை நடத்தி விட்டேன். மறு ஆய்வுகூட நான்கு மாவட்டங்களில் நடத்தியாகி விட்டது. உள்ளாட்சித் துறையில் குடிநீர், மின்சாரம் ஆகிய துறைகள் இணைந்து வேலை செய்ய வேண்டி இருப்பதால், நான் நடத்திய ஆய்வுக் கூட்டங்கள் வேலைகளை விரைவுபடுத்த உதவியாக இருக்கின்றன."

ஸ்டாலின் சந்திக்கும் மற்றொரு பிரச்னை, நேரமின்மை. தினமும் வீட்டிலும் கோட்டையிலும் நூற்றுக்கணக்கில் விஸிட்டர்களைப் பார்க்கிறார்.

"என் துறையில் ஏதாவது மனு, கோரிக்கை என்றால் பரவாயில்லை. அனைத்துத் துறைகளுக்கான மனுக்களையும் என்னிடம் கொடுத்து விடுகிறார்கள். கோப்புகளைப் பார்க்க நேரமே கிடைப்பதில்லை" என்கிறார் சிரித்தபடி. குளித்து முடித்து, வீட்டிலுள்ள அலுவலக அறையில் வந்து அமர, விஸிட்டர்கள் வரத் துவங்குகிறார்கள். "கழகத் தொண்டர்கள் நம்பிக்கையோடு இங்கே வருகிறார்கள். நிறைய பேர் வேலை கேட்டு வருபவர்கள். அரசில் ஆள் எடுப்புக்கு முறையான விதிகள் இருக்கின்றன. நாம் என்ன செய்ய முடியும்? எனவேதான் 'ஏதாவது இண்டர்வியூ வந்தால் சொல்லுங்கள். வேண்டுமானால் சிபாரிசு செய்கிறேன்' என்கிறேன்" என்று கூறும் ஸ்டாலின் விரும்பிப் படிப்பது காண்டேகர், நா.பார்த்தசாரதி புத்தகங்கள்.



• "நியூஸ் செம ஹாட்டா!"

காலைச் சிற்றுண்டி. இட்லி, கேழ்வரகு தோசை பரிமாறும் மனைவி துர்காவிடம், 'இன்பன் எழுந்தாச்சா?' என்கிறார். இன்பன், ஸ்டாலினின் பேரன்; உதயநிதியின் மகன். "இன்பன் எனக்கு உயிர். அதேபோல் தமிழ்நாட்டிலேயே எனக்குப் பிடித்த சுற்றுலாத் தலம் கொடைக்கானல். சாப்பாட்டு விஷயத்தில் அசைவத்தில் பிடித்தது மீன். அவ்வப்போது குடும்பத்துடன் தாஜ், அடையார் பார்க் என்று சென்று வெளுத்துக் கட்டுவதுண்டு" என்று அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு கோட்டைக்குக் கிளம்புகிறார் ஸ்டாலின். அதற்குள் ப்ளே ஸ்கூலுக்குத் தயாராகும் பேரன் இன்பன், பாட்டியின் தோளில் தொற்றியவாறே 'தாத்தா' ஸ்டாலினுக்கு டாடா காட்ட, பிஸியான மற்றொருநாள் துவங்குகிறது...

**- ப்ரியன்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

ஸ்ரீ:







ஸ்ரீ அஹோபில மடத்தின்
ஆஸ்தான பத்திரிகை

## 65 ஆண்டுகளாக ஆன்மீகப் பணியில்

# ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா

(தமிழ், ஆங்கில மாத இதழ்)

* ஜீயர் ஸ்வாமிகளின் அருளுரைகள்
* இதிகாஸ, புராணங்களின் விசேஷ கதைகள்
* திவ்யதேச எம்பெருமான்களின் பெருமைகள், வண்ணப்படங்கள்
* ஆசார்ய வைபவம்
* இந்த மாதம் உங்கள் நிலை
* மனம் மகிழும் மணப்பொருத்தம் அமைய திருமண விளம்பரங்கள்

*மற்றும் சுவையான கட்டுரைகள், கதைகள்,*
*மகான்கள் செய்த அற்புதங்கள்.*

**ஒவ்வொருவர் இல்லத்திலும் மாதம்தோறும்**
**ஸ்ரீந்ருஸிம்மர் அனுக்ரஹம் பெற இன்றே சந்தா செலுத்துவீர்**

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | : | Rs.10,000/- | |
| ஆண்டு சந்தா - Tamil | : | Rs. 200/- | $ 50 |
| ஆண்டு சந்தா - English | : | Rs. 250/- | $ 50 |
| தனி இதழ் தமிழ் | : | Rs. 20/- | |
| ஆங்கிலம் | : | Rs. 25/- | |

Publishers:
Sri Nrisimhapriya Trust,
30, Venkatesa Agraharam, Mylapore,
Chennai - 600 004. Phone: 044-24611540, 24614402
email:nrisimhapriya@vsnl.net

இராமாயணம், மஹாபாரதம், விஷ்ணுபுராணம், மற்றும் பல தனி வெளியீடுகளின் விவரங்களுக்குத் தொடர்பு கொள்ளவும்.




# கல்கி



**2007 ஏப்ரல் 15**
**சர்வஜித் சித்திரை 2**
**மலர் : 65**
**இதழ் : 37**


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## தங்க அரிசியைத் தின்ன முடியுமா?

அரசே ஒரு வேலை நிறுத்தத்தை அறிவிக்கலாகாது என்று ஏற்கெனவே உச்சநீதிமன்றம் ஒரு தீர்ப்பு வழங்கியுள்ளது. இதனைச் சமாளிக்க, தமிழக முதல்வர் அனைத்துக் கட்சிகள் நடத்தும் பந்த் அறிவித்தார். ஆனால், போக்குவரத்துத் தடை, அனைத்து நிறுவனங்களுக்கும் 'விடுமுறை' அறிவிப்பு ஆகியவற்றை அரசு வெளியிட்டது!

ஆக, உச்சநீதிமன்றத்தை இரட்டிப்பு அவமதிப்புக்கு உள்ளாக்கியிருக்கிறது தமிழக அரசு :

அந் நீதிமன்றம் விதித்த இடைக்காலத் தடையை ஏற்க மறுத்தது ஓர் அவமதிப்பு; அரசே முன்னின்று பந்த் நடத்தியது மற்றோர் அவமதிப்பு.

சராசரி மக்கள் நீதிமன்ற ஆணையை மீறினால் தண்டனை தான் கிடைக்கும். அதிகார மையம் என்பதால் அரசு தப்பித்துக் கொள்கிறது. மக்களுக்கு வழிகாட்ட வேண்டிய அரசே தவறிழைக்கிறது. பொருளாதார ரீதியிலோ, தமிழகத்துக்குக் கோடிக் கணக்கில் நஷ்டம்.

இத்தனைக்கும் உச்சநீதிமன்றம் சமூக நீதியை எதிர்த்தோ மறுத்தோ தீர்ப்பு வழங்கவில்லை. அரசின் புதிய இட ஒதுக்கீடு அமலாக்கத் திட்டத்துக்கு இடைக்காலத் தடைதான் விதித்திருக்கிறது. 'சமூக நீதி கருதி ஒதுக்கீடுகளை அதிகரித்துக் கொண்டே போனால், அரசியல் சாசனம் நமக்கு உறுதி செய்துள்ள சம உரிமை என்பதற்கே இடமற்றுப் போகும், என்று எச்சரித்திருக்கிறது. 1931 மக்கள் தொகை கணக்கெடுப்பின் அடிப்படையில் ஒதுக்கீடுகளை நிர்ணயிக்கும் அபத்தத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறது. ஒதுக்கீடு இடங்கள் யாவும் அந்தந்தப் பிரிவினருள் வசதிபடைத்தவருக்கே






மீண்டும் மீண்டும் போய்ச் சேர்வதை ஆட்சேபித்திருக்கிறது.

முக்கியமான இந்த மூன்று ஆட்சேபணைகளுக்கும் எதிர்வாதமே இல்லாததால்தான் அரசியல்வாதிகள் வேலை நிறுத்தம் மூலம் ஆர்ப்பாட்டம் செய்து, மக்களை ஏமாற்றி, நாடகமாடி அனுதாபம் பெற முயற்சி செய்கிறார்கள். பந்த்தை மக்கள் பேரில் திணித்துவிட்டு, 'சமூக நீதிக்கு மக்களிடமிருந்து கிடைத்த அமோக ஆதரவு' என்பதாக சன் டி.வி.யில் அறிவிப்பது எப்பேர்ப்பட்ட அபத்தம்!

சமூக நீதி தழைக்க வேண்டும் என்பதில் நல்லிதயம் படைத்த யாருக்குமே இரண்டாவது கருத்து இருக்க முடியாது. இதற்காக தி.மு.க.வும் இதர திராவிட கட்சிகளும் விழிப்புணர்வு ஏற்படுத்திப் போராடிய வரலாற்றையும் மறக்க முடியாது.

ஆனால், காலவரையறையின்றி, சில பிரிவினரை இட ஒதுக்கீடு தந்து 'செல்லப்பிள்ளை களாக்குவது' அவர்களை வளர்ப்பதற்குப் பதில் முடக்கும்.

அப்பிரிவினருள் செல்வமும் (அரசியல்) செல்வாக்கும் படைத்தவர்கள் மட்டுமே மளமளவென்று வளர வழி வகுக்கும்.

ஒதுக்கீடு பெற்றும் கல்வியில் சிறக்க முடியாமல் பின் தங்கி, குறைந்த மதிப்பெண் பெறும் மாணவர்களிடையே தாழ்வு மனப்பான்மையும் மனச்சோர்வும்தான் பெருகும்.

கல்விக் கூடங்களில் இட ஒதுக்கீடு செய்தால் மட்டும் போதாது. சமூகத்திலும் கல்வியிலும் பின்தங்கியுள்ள மாணவர்களுக்குச் சிறப்புப் பயிற்சியும் கவனமும் வழங்கப்பட்டே ஆக வேண்டும். ஆரம்பக் கல்வி நிலையிலேயே இதைச் செய்ய வேண்டும். இம்மாணவர்களின் மதிப்பெண்களை மட்டுமின்றி சுயமதிப்பையும் பெருக்குவதற்கு எந்த அரசியல் கட்சி என்ன செய்தது? இந்த அறுபதுக்கு மேலான ஆண்டுகளில் எந்த ஆட்சி இவர்களுடைய மெய்யான மேம்பாட்டுக்கு உதவியது? அவ்வளவு ஏன் ...? ஓ.பி.ஸி. பிரிவினரின் நிலை அறிய, ஒரு மக்கள்தொகை கணக்கெடுப்புகூட 1931க்குப் பிறகு ஏன் நடத்தப்படவேயில்லை?

வயிறு காய்ந்தவனிடம் தங்க அரிசியைத் தந்து தின்னச் சொன்ன கதையாகத்தான் இருந்து வருகிறது நமது இட ஒதுக்கீடு கொள்கை.

உச்சநீதி மன்றத்தை மீறும் அதிகாரங்களை அரசு பெறும் வகையில்கூட அரசியல் சாசனத்தை மாற்றி அமைக்கலாம் - அறுதிப் பெரும்பான்மை இருக்குமானால்! ஆனால், அத்தகைய அதிகாரக் குவிப்பும், ஜனநாயக அமைப்பில் நீதிமன்றத்துக்கு உள்ள உயர் இடத்தை மதிக்க மறுக்கும் போக்கும் சமூக நீதிக்கு வழி வகுக்காது; சமூக அழிவுக்குத்தான் வித்திடும்! ●

# வெயில் கால நோய்களும் தீர்வுகளும்...

“வெயில் காலம் வந்துவிட்டது. இனி அடுத்த மூன்று மாதங்களுக்கு உஷாராக இருக்க வேண்டும். வெப்பத்தால் உண்டாகும் நோய்களிலிருந்து நம்மைக் காத்துக்கொள்வது மிக அவசியம்” என்கிறார் சென்னை, மைலாப்பூர் ஜெயா க்ளினிக்கைச் சேர்ந்த டாக்டர் சாய்ரமணன். வெப்ப கால நோய்கள் குறித்தும் அவற்றிலிருந்து பாதுகாத்துக் கொள்வது குறித்தும் நம்மிடம் அவர் விளக்கினார்...



* டாக்டர் சாய்ரமணன்

“தோலில் உள்ள வியர்வைச் சுரப்பிகளில் அழுக்கு சேர்ந்தால் வியர்க்குரு வரும். அதில் பாக்டீரியா தொற்றிக்கொண்டால் வேனல்கட்டி வரும். பூஞ்சை அல்லது காளான் சேர்ந்து கொண்டால் அரிப்புடன் கூடிய படை, தேமல் தோன்றும். மேலும், வெப்பத்தினால் காய்ச்சல், தளர்ச்சி, அதிர்ச்சி, மயக்கம், தசைப்பிடிப்பு, வலி போன்ற ஆபத்தான நோய்களும் வரலாம்.

நம் உடலின் வெப்பநிலை அதிகரிக்கும்போது மூளையில் இருக்கும் 'ஹைப்போதாலமஸ்' வியர்வையைத் தாராளமாகச் சுரக்கச் செய்து அதிகப்படியான வெப்பத்தை வெளியேற்றுகிறது. இதனால் உடல் வெப்பம் சீரான நிலையில் இருக்கிறது.

உச்சகட்ட வெயிலால் சிலருக்கு ஹைப்போதாலமஸ் செயல் இழந்து விடுகிறது. ஆகவே காய்ச்சல் அதிகரிக்கிறது. அது 106 டிகிரி ஃபோரன்ஹீட் அளவைத் தாண்டும்போது வெப்பத் தளர்ச்சி உண்டாகிறது. பாதிக்கப்பட்ட நபர் சோர்வாகக் காணப்படுவார். காய்ச்சல் மிகவும் கொதிக்கும். உடல் வலி, உடல் அசதி வாட்டும். மிகவும் களைத்துப் போவார். அளவுக்கு மீறிய வெப்பத்தின் காரணமாக உடலிலுள்ள நீரின் அளவும், உப்பின் அளவும் மிகவும் குறைந்து விடுவதால்தான் இந்த நிலை ஏற்படுகிறது.

இச்சமயத்தில் பாதிக்கப்பட்டவரை குளிர்ச்சியான, நிழல் சூழ்ந்த இடத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும். குளிர்ந்த நீரில் நனைத்த துணிகளை உடலின்மீது மூட வேண்டும். தண்ணீர், மோர், இளநீர், குளுக்கோஸ், உப்பு கலந்த நீர், எலுமிச்சைப் பழச்சாறு, பதனீர் போன்றவற்றில் எது கிடைக்கிறதோ, அதைத் தாராளமாய்ப் பருகக் கொடுக்க வேண்டும்.

நீண்ட நேரம் வெயிலில் வேலை செய்பவர்கள் திடீரென மயக்கம் அடைவது எங்கும் நடக்கக் கூடியதே! இதற்குக் காரணம், வெயிலின் உக்கிரத்தினால் தோலிலுள்ள இரத்த நாளங்கள் விரிவடைந்து இடுப்புக்குக் கீழ் இரத்தம் தேங்கி விடுகிறது. மூளைக்குப் போதுமான இரத்தம் செல்வதில்லை. இந்நிலை நீடிக்கும்போது 'வெப்ப மயக்கம்' உண்டாகிறது.

சில சமயங்களில் வெயில் மிகக் கடுமையாகத் தாக்கும்போது 'வெப்ப அதிர்ச்சி' உண்டாகும். இது மிகவும் ஆபத்தான நிலை. இந்த நிலைமை ஏற்படும்போது உடலின் வெப்ப நிலையைச் சமன் செய்யும் இயக்க முறைகள் அனைத்துமே சீர்குலைந்து விடுவ

தால் தலைச்சுற்றல், வாந்தி, மனக்குழப்பம், நினைவிழப்பு, கை கால் வலிப்பு போன்றவை ஏற்படும்.

இப்படிப் பாதிக்கப்பட்டவரை உடனே குளிர்ச்சியான இடத்துக்கு அழைத்துச் சென்று, குளிர் பானங்களையும், திரவ ஆகாரங்களையும் கொடுக்க வேண்டும். பருகும் நிலையில் அவர் இல்லையென்றால், உடனடியாக மருத்துவரின் அவசரச் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

வீட்டிலோ அலுவலகத்திலோ நிழலில் இருப்பவர்களுக்கும்கூட வெப்ப நோய்களின் பாதிப்பு ஏற்படலாம். வெயில் காலத்தில் அதிகமாக வியர்ப்பதால் உடலிலுள்ள திரவமும், சில முக்கியமான தாதுப் பொருள்களான கால்ஷியம், சோடியம், மெக்னீசியம் போன்றவை வியர்வையில் வெளியேறி விடும். இந்த உப்புகள் இரத்தத்தில் குறைந்து விடுவதால், எலும்புத் தசையில் இறுக்கமும் இசிவும் உண்டாகி, வலி ஏற்படும்.

இதற்கு வலி நிவாரணிகளைப் பயன்படுத்தினால், அவை உடலில் மீண்டும் அதிக வியர்வையை உற்பத்தி செய்யும். உப்புகள் மேலும் வெளியேறும். இதனால் தசைவலி அதிகமாகும். எனவே, கோடையில் உண்டாகும் தசைப் பிடிப்பு வலிக்கு உப்பு கலந்த நீர், 'எலெக்ட்ரால்' பவுடர், சர்பத், மோர், இளநீர், பதனீர் போன்ற திரவ ஆகாரங்களை அதிகம் பருகினால் முழு நிவாரணம் கிடைக்கும்.

குழந்தைகள் முதியோர், உடல்நலம் குறைந்தோர் வெயிலில் செல்வதைத் தவிர்க்க வேண்டும். அப்படியே சென்றாலும் குடை எடுத்துச் செல்ல வேண்டும். கண்களுக்குக் குளிர்க் கண்ணாடியை அணிந்து கொள்ளலாம். தளர்வான பருத்தி ஆடைகள் நல்லது. வெள்ளைநிற ஆடைகளை அணிய வேண்டியது முக்கியம்.

வெயிலில் அதிகநேரம் நிற்க வேண்டிய நிலையில் இருப்போர் தினமும் குறைந்தது 4 லிட்டர் திரவம் பருக வேண்டும். இளநீர், பதநீரை சாப்பிடலாம். பப்பாளி, தர்ப்பூசணி, வெள்ளரிக்காய், கொய்யா, சாத்துக்குடி, ஆரஞ்சு, திராட்சை, அன்னாசி, நுங்கு போன்ற நீர் நிறைந்த காய், கனிகளையும், கீரைகளையும் கோடையில் அதிகம் சேர்த்துக்கொள்ள வேண்டும். அசைவ உணவுகளைத் தவிர்க்கவும்.

பொதுவாக, எல்லாருக்குமே இட்லி, இடியாப்பம், தயிர்சாதம், மோர்சாதம், கம்பங்கூழ், வெங்காயப் பச்சடி, வெள்ளரி சாலட், பொன்னாங்கண்ணிக் கீரை, பீட்ரூட், காரட், முள்ளங்கி, பாகல், தக்காளி ஆகியவை கோடைக்கேற்ற உணவுகள்" என்கிறார் டாக்டர் சாய்ரமணன்.

- ப்ரியா



# எழுவதும் விழுவதும்

யுகபாரதி

மேலும் சில நரைமுடிகள்
கிட்டியதன்றி எதுவுமில்லை
போன வருடத்துக் கணக்கில்

முடிந்ததில்லை வெளியேற்ற
வேண்டாமென்றாலும்
வந்துவிடுகிற வருடத்தை

சொல்ல தைரியமில்லை
போடா வெளியேயென்று
பொசுக்கென சினங்கொள்ளும்
அப்பாவைப்போல

வெந்நீருற்றிய வெப்பக்காலோடு
வந்து நிற்கும் சிநேகிதிபோல்
போய்விடுகின்றன நாட்கள்
வந்தும் வராமலேயே

நடக்க வேண்டும்
காலம் தாழ்த்தியேனும்
ஓரிரு நல்ல விஷயமாவது

எழ விழுவதும் விழ எழுவதுமாய்
ஏக்கங்கள்
பெருமுச்சுடன் உராய்ந்து
பொசுங்குகின்றன கணங்கள்

பிறந்து விடுகின்றது ஆண்டு
ஆள முடியாதவர்க்கும்

பிறந்திருக்கலாம்
பெண்ணாக
கீழே விழுந்தாலும் மண்
ஒட்டாது
மீசையில்



# உங்களில் பலருக்கு
# எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி
# ஒரு மரபாகும்

E/G
ESTATE
FRESH
Coffee

வெகு காலமாக, புதிதாக தயாரிக்கப்பட்ட தரம் வாய்ந்த காபியை உங்கள் விருப்பத்திற்கேற்ற வகையில், உங்கள் ஒவ்வொருவருக்கும் நாங்கள் வழங்கி வருவதை நீங்கள் நன்கறிவீர்கள். மறுக்கவியலாத மற்றும் மிக உயர்ந்த தரத்துடன் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி உற்பத்தி செய்யப்படுவதால், பலகாலமாக எங்கள் வாடிக்கையாளர்களால் அது பெரிதும் விரும்பப்பட்டு வருகிறது. தரத்தை விரும்பும் எங்கள் வாடிக்கையாளர்களின் வசதிக்காக, அவர்களுக்கு அருகாமையில் உள்ள கடைகளில் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. காலம் காலமாக உங்கள் ஆதரவையே எங்கள் நோக்கமாக கொண்டுள்ள நாங்கள், உங்கள் பகுதி மற்றும் தமிழ்நாடு முழுவதிலும் எங்களது தரம் வாய்ந்த தயாரிப்பான எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை புதிய எழில்மிகு மற்றும் சிறப்பான பேக்கிங்கில் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்கள் ஒவ்வொருவரின் நாவின் சுவையை திருப்தி செய்து, நீங்கள் சுவைக்கும் காபியின் மணம் உங்கள் நாவில் நெடுநேரம் நிலைத்திருக்கச் செய்வதே எங்கள் நோக்கமாகும். எனவே உங்கள் அருகாமையிலுள்ள பலசரக்கு கடைக்குச் சென்று, எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை கேட்டு வாங்கிப் பருகி, உங்கள் காபியின் விசேஷ மணம் மற்றும் சுவையை அனுபவித்து மகிழுங்கள்.









இதுபோன்ற நிறைவில்லை
வேறெந்த காபியிலும்

COFFEE 85%
CHICORY 15%







For Door Delivery
Chennai:
044-24415290
Rest of Tamilnadu:
94862 63342

EfG
Estate Foods & Grains

சென்னை மற்றும் தமிழகமெங்கும் வியாபார விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.
தொடர்பு கொள்க: Chennai:9841221796, Rest of Tamilnadu: 9486263342

எல்லாம் குப்புசாமிக் கிழவனால் வந்த வினை!"

"அந்த அரை லூஸு சொன்னா, உனக்குப் புத்தி எங்கேடி போச்சு? இப்ப அதுவா உனக்கு அரிசியும் பருப்பும் வாங்கித் தரப்போகுது? அதுக்கென்ன, வேளா வேளைக்குச் சோறு கிடைச்சுடுது. ஒரு பேப்பரை வாங்கி வெச்சுக்கிட்டு பெரிய வக்கீல் மாதிரி இவன் சரியில்ல, அவன் சரியில்லன்னு சொல்லிக்கிட்டுத் திரியும். கிழவன் சொன்னானாம், இவ போய்க் கேட்டானாம். பைத்தியக்காரி."

பிலுபிலுவெனப் பிடித்துக் கொண்டாள் வள்ளியக்கா. சும்மாவா? அவதானே இந்த வேலைய வாங்கித் தந்தவ. நானூறு ரூவா சம்பளம். காலையிலயும் சாயந்தரமும் காபி. ராத்திரி மிச்சமாகற சோறு, கொழம்பைக் கேட்கவே தேவையில்லை, எடுத்துப் போட்டுட்டு வந்துட்டே இருக்கலாம். எல்லாம் போச்சு! மொதலுக்கே மோசம்.

இருக்கும். பார்த்தா தெரியாது. ரேஸ் குதிரை கணக்கா நடக்கும். தீபாவளியப்ப செய்யற முறுக்கை கடக் முடக்குன்னு போட்டு அரைக்கும். பேப்பரைத் தள்ளி வெச்சுக்கிட்டே தெளிவா படிக்கும்.

போலீஸ்லதான் வேலை செஞ்சுதாம். அப்பவே யாரோ ஒரு எம்.எல்.ஏ. என்னமோ சொன்னான்னு கன்னத்துல அறைஞ்சுடுச்சாம். அது கேஸாகி கோர்ட்டுக்குப் போனப்ப ஜட்ஜ்கிட்டயே 'ஆமா, அப்படித்தான் பண்ணுவேன். இஷ்டம்னா வேலையில வெச்சுக்கங்க, இல்லேன்னா அனுப்பிடுங்க'ன்னு சொல்லிடுச்சாம். பொண்டாட்டி, புள்ளைங்க இருக்காங்க. அவங்க சோறு போட்டுடறாங்க. நம்மனைச் சொல்லு.'

"என்ன மீனாட்சி வத்த கோழியாட்டம் போய்ட்டு இருக்கே?" அப்படின்னு கேட்டுகிட்டே எதிர்ல வந்துச்சு.

சிறப்புச் சிறுகதை

# மீண்டும் மீனாட்சி!

போன வாரம் சனிக்கிழமை புடிச்ச சனி. பத்து நாளா வறட்டு இருமலா இருக்கேன்னு டாக்டர்கிட்டே போய் 'மொய்' வெச்சுட்டு வீட்டுக்குத் திரும்பிக்கிட்டு இருந்தப்பதன் குப்புசாமிக் கிழவனைப் பார்த்தேன். இந்தக் குப்பத்துல தான் இருக்கு. அறுபது வயசுக்கு மேல

"சிக்குதான். ஒரே இருமலு. என்னென்னமோ குடிச்சுப் பார்த்தேன். சரியாவல. அதான் டாக்டரைப் பார்த்து 'மொய்' வெச்சிட்டு வரேன்."

"அது சரி, முன்ன மாதிரி உன்ன அடிக்கடி பார்க்க முடியறதில்லையே."

"வீட்டு வேலைக்குப் போறேனில்லே."

"நாளைக்கு கார், செல்போனைவிட காய்கறிங்க விலைதான் அதிகமா இருக்கும். அதனால இன்னைக்கே ப்ளான் பண்ணி பெரிய ஆளுங்க இறங்கிட்டாங்க."

# ஆரணி யுவராஜ்


"அது தெரியும் மீனாட்சி. வள்ளி சேர்த்துவிட்டாளே, அங்கேதானே?"

"ஆமா!"

"முன்னாடி எல்லாம் மத்தியான நேரத்துல பார்ப்பேன். இப்படியும் அப்படியும் திரிஞ்சுட்டு இருப்பே. இப்ப ஆளு கண்லயே படறதில்லையே."

"அதுவா? முன்ன அவங்க வீடு இங்கே சுப்பிரமணி தெருவுல இருந்தது. இப்ப அசோக் நகருக்குப் போய்ட்டாங்க. பெரிய ஃப்ளாட்டு. அவ்வளவு தூரம் போய்ட்டு போய்ட்டு வர முடியுமா? அதான் மத்தியானம் அங்கேயே இருந்துடறேன்."

"பெரிய ஃப்ளாட்டா? அந்த ஆளு மவுண்ட் ரோடுல இருக்கற ஒரு பிரைவேட் கம்பெனிலதானே வேலை செய்யறான்?"

"இப்ப அவரு புள்ளை வேலைக்குப் போகுதில்லே. படிச்சு முடிச்சதுமே வேலை கெடைச்சுடுச்சு. நாப்பதாயிரம் சம்பளமாம்!"

"எங்கே, ஐ.டி.யிலயா?"

"அது என்ன எழவோ, யாருக்குத் தெரியும்? தெனமும் கூட்டிட்டுப் போறதுக்கு காரு. அது இதுன்னு அமர்க்களம் தான்."

"போவட்டும். உனக்கு என்ன சம்பளம் தர்றாங்க?"

"நானூறு."

"நியாயமா? நாப்பதாயிரம் சம்பாதிக்கறவன் நானூறு ரூபா கொடுத்து வேலை வாங்கறானா? ஏன், ஆயிரம் ரூபா



கொடுத்தா என்னவாம்?''

''நல்ல கதையா இருக்கே நீ சொல்றது? அவன் பெரிய படிப்புப் படிச்சிருக்கான்; நிறைய சம்பாதிக்கறான். நம்ம வேலை என்னமோ, அதுக்கான சம்பளம்தானே தருவாங்க?''

''என்ன, பொல்லாத வேலை செய்யறான்? அவனுக்கு மூளை வேலை. உனக்கு உடம்பு வேலை. நீ இங்கே கை வலிக்க, இடுப்பு வளைஞ்சு வேலையச் செய்யலைன்னா அவன் நீட்டா டிரெஸ் பண்ணிக்கிட்டுப் போக முடியுமா?''

''........''

''இதுதான் மீனாட்சி நம்ம இந்தியா. பொருளாதாரத்துல முன்னேறாது! அமெரிக்காகாரன் வர்றான். ரஷ்யாக்காரன் வர்றான். இந்தக் கம்பெனிய ஆரம்பிக்கறான். அந்த கம்பெனிய ஆரம்பிக்கறான்னு பெருசா சொல்றாங்களே... இதனால என்ன பிரயோஜனம்? மேல இருக்கறவன்தான் இன்னும் மேல போய்ட்டு இருக்கான். நம்மளை மாதிரி ஆளுங்க அப்படியேதான் இருக்கோம். இதுவா முன்னேற்றம்?''

''........''

''நாளைக்கு கார், செல்போனைவிட காய்கறிங்க விலைதான் அதிகமா இருக்கும். அதனால இன்னிக்கே பிளான் பண்ணி பெரிய பெரிய ஆளுங்க இறங்கிட்டாங்க. அதனால வயித்துல அடி வாங்கறது நாமதான். இன்னிக்குத் தள்ளு வண்டியில வித்துக்கிட்டுச் சுதந்திரமா இருக்கறவன், நாளைக்கு அவன்கிட்டே கையைக் கட்டிட்டு வேலை செய்யணும். இதுவா முன்னேற்றம்?''

''ஐயய்ய! இப்ப நீ என்ன சொல்ல வர்றே?''

''சம்பளம் அதிகம் வேணும்னு கேளு, மீனாட்சி. கொடுத்தாத்தான் வேலை செய்வேன்னு சொல்லு. உன்னை மாதிரி நாலு பேரு கேட்டாதான் கொடுப்பாங்க. இல்லேன்னா இப்படியே இருக்க வேண்டியதுதான். இன்னிக்கு நீ, நாளைக்கு உன் பொண்ணு. வேலை முடிஞ்சு வர்றப்ப ஹோட்டலுக்கோ, பாருக்கோ போனாங்கன்னா ஒரு மணி நேரத்துல ஆயிரம், ரெண்டாயிரம்னு செலவழிப்பாங்க. ஆனா, மாசம் ஃபுல்லா மாடு மாதிரி வேலை செய்யற உன்னை மாதிரி ஆளுங்களுக்குத் தரமாட்டாங்க. இதையெல்லாம் எந்த அரசியல்வாதி கேட்கறான்? கேட்கமாட்டான். நாமதான் கேட்கணும்.''



இப்படித்தான் ஆரம்பிச்சது. கிழவன் சொன்னதை யோசிச்சப்ப சரிதான்னு தோணுச்சு. ஒண்ணுமில்லே, ஒரு நாள் திடுதிப்புன்னு போன் பண்ணி என்னமோ பீட்சா கொண்டு வான்னு முதலாளியோட பையன் சொன்னான். ஒருத்தன் கொண்டு வந்து கொடுத்துட்டு ஏழுநூறு ரூபா வாங்கிட்டுப்

போனான். கொஞ்சம்தான் சாப்பிட்டாங்க. என்னமோ சரியில்லேன்னு வெச்சட்டாங்க. எனக்கு அதைப் பார்க்கவே பயமா இருந்துச்சு. கடைசியில அது குப்பைக்குப் போச்சு.

வேலைக்குப் போறப்ப எல்லாம் கிழவன் சொன்னது மனசை குடைஞ்சது. மெதுவா முதலாளியம்மாகிட்டே பேசினேன். ஐயாகிட்டே சொல்றேன்னு சொல்லுச்சு. கரெக்டா சொல்லியும் இருக்கு.

"என்ன மீனாட்சி, சம்பளம் அதிகம் வேணுமாமே?" சிரிச்சுக்கிட்டே கேட்டாரு முதலாளி.

"ஆமாங்க. செலவுங்க அதிகமாகுது."

"சரி, அடுத்த மாசத்துல இருந்து ஐநூறா வாங்கிக்க."

"சார்..."

"என்ன?"

"ஐநூறு பத்தாதுங்க."

"அப்போ ஐயாயிரம் வாங்கிக்கறியா?"

"......"

"சொல்லு மீனாட்சி."

"சார், உங்க புள்ள இப்ப நாப்பதாயிரம் சம்பாதிக்கறாரு. ஒருவேளை ஹோட்டலுக்குப் போனா ஐந்நூறு, ஆயிரம்னு செலவு பண்றீங்க..."

> **வெட்கமாதான் இருந்தது. என்ன பண்றது? ரோஷத்தைப் பார்த்தா ரெண்டு புள்ளைங் களுக்கு யார் சோறு போடறது?**

"அட! நல்லா பேசறியே? விட்டா வீட்டுக்கு எதிர்ல உண்ணாவிரதம் இருப்பே போலிருக்கே? அம்மா, தாயே! இவ்வளவு ஹை-கிளாஸ் வேலைக்காரி எங்களுக்கு வேணாம். நீ கிளம்பும்மா."

அவ்வளவுதான்! மனுசன் 'மூடு' தெரியாம வாயைக் கொடுத்துட்டேன் போலிருக்கு. அப்பவே சம்பளத்தைக் கையில கொடுத்து அனுப்பிட்டாரு. இப்ப என்ன பண்றது?

"சரி வாடி.. அந்த அம்மாகிட்டே எப்படியாவது கெஞ்சி மறுபடியும் சேர்த்துவுடறேன். வாயை மூடிட்டு ஒழுங்கா வேலையப் பாரு."

வள்ளியக்காவோடு போனேன். அவளுக்கு முதலாளியம்மாவை ரொம்பப் பழக்கம். நைச்சியமாப் பேசினா. காலுல விழாத குறையா நானும் கெஞ்சினேன். ஒரு வழியா மனசு இறங்கினாங்க.

"சார்கிட்டே பேசிக்கிறேன். இனிமே இப்படி வாயைக் கொடுத்து வாங்கிக் கட்டிக்காதே. போய் வேலையைப் பாரு"ன்னு சொன்னாங்க.

வெட்கமாதான் இருந்தது. என்ன பண்றது? ரோஷத்தைப் பார்த்தா ரெண்டு புள்ளைங்களுக்கு யார் சோறு போடறது? புருஷன்காரன் ஒழுங்கா இருந்தா இப்படி யார் யார் காலையோ பிடிக்கிற நிலைமை வருமா?

ஆச்சு! ஒரு வாரம் ஓடிப் போச்சு. முதலாளி ஒரு தடவை முறைச்சுப் பார்த்ததோடு சரி. வேற எதுவும் பேசலை. அன்னிக்குச் சாயந்திரம் முப்பது பேர் வந்திருந்தாங்க. எல்லோருமே அவரு ஆபீஸ்ல வேலை செய்யறவங்களாம். அத்தனை பேருக்கும் காபி, டீ போட்டுட்டுப் போய்க் கொடுத்தேன்.

"சார்! நாங்க எல்லோரும் நீங்க சொல்ற மாதிரி கேட்கறோம். எங்க தேவைகளை மேனேஜ்மெண்ட்கிட்டே பேசி வாங்கித் தர்றது உங்க பொறுப்பு" - யாரோ ஒருத்தர் சொன்னார்.

"கண்டிப்பா! நாம சம்பாதிச்சுக் கொடுக்கறதுல அவங்க பங்களா மேல பங்களாவா கட்டிட்டுப் போவாங்க. நாம வாடகை வீட்லயே இருக்கணுமா?" - இது முதலாளி.

என்னமோ யூனியனாம். இவரு தலைவராம்... முதலாளியம்மா பையன்கிட்டே சொல்லிட்டு இருந்தாங்க. ○



## ரா.பார்த்திபனின்

# ஜிகினா

ஒட்டிக்கொண்டால்... அதிலிருந்து நம் முகத்தை அப்புறப்படுத்துவது அடாத செயல்! ஒப்பனை செய்து கொண்டிருக்கும்போது எப்போதாவது தப்பித் தவறி ஒரு ஜிகினா, கண்ணுக்குக் கீழுள்ள கோடிட்ட பகுதியில் புள்ளியாய் ஒட்டிக்கொள்ளும். ஒரு வழியாய் அதைக் கண்டுபிடித்துத் துடைத்தெறிய முடியாமல் நகத்தால் கீறி, அதிலும் குட்டிப் பாம்புகளாய் இரண்டு, மூன்று கோடுகள் மட்டுமே நெளியுமே தவிர, இந்த ஜிகினா மட்டும் அப்படியே இருக்கும், அழுத்தமாய்.



# புதிய தொடர்

'சார்... ஷாட் ரெடி!' - உதவி இயக்குநர் அழைக்க, மேக்கப்மேன் 'இத்தனூண்டுதான் சார். தெரியாது. நீங்க போங்க!' என்பார்.

'ஆல் லைட்ஸ்'

'சார்' ஃபோகஸ் ப்ளீஸ்'

நம் கண்கள் கேமரா இருக்கும் திசையில் பார்க்க... ஓர் ஊடுருவலுக்குப் பின் அந்த ஆபரேடிவ் கேமராமேன் சொல்வார்...

'சார், கண்ணுக்குக் கீழே ஏதோ ஜிகினா மாதிரி ஒட்டிக்கிட்டிருக்கு'

'போச்சுடா!'

'தம்பி, கண்ணாடிய காட்டுங்க.'

வெளிச்சம் பட்டதால் ஜிகினா இன்னமும் 'பளிச்' 'பளிச்' என்கிறது. பூந்துடைப்பம் போன்ற பிரஷ் போட்டு மந்திரித்துக்கூட பார்த்தாகிவிட்டது. ஸ்டிக்கர் போலச் சிறிதாக இருந்தால்கூட பிய்த்தெறிந்து விடலாம்.

அளவில் சிறியதாய் 'இத்தனூண்டாய் இருப்பதுதான் வெளியே இழுத்தெறிந்துவிட முடியாத அதன் வலிமை - சக்தி.

அந்த ஜிகினா போல என் நெஞ்சின் உட்சுவர்களில் ஈரத் துகள்களாய் ஒட்டிக்கொண்டிருக்கும் சில சம்பவங்களை உங்களோடு பகிர்ந்துகொள்ளப் போகிறேன்.

எண்ணங்களை எழுத்தாக்கும்போது அதன் கற்பில் சற்றுத் தேய்மானம் கூடும். அதை அப்படியே வார்த்தைகளில் வழித்தெடுக்கவே விரும்புகிறேன்.

கூடவே, கூடவே நடந்து, கூடவே ரசித்து, கூடவே வாழவோ, கூடவே சாகவோ, கூடவே ஆசைப்பட்டு கூடவே.... -

ஆனால் கூடவே முடியாமல் - வேறோர் கூடவே முடிந்த தொடர்புகள் கூடவே!

எனவே,

இன்று மறதி காரணமாகவோ, காரண மறதியாகவோ மகிழ்வோடு இருக்கும் எந்த நிழலையும் என் நிஜம் மிதித்துவிடக் கூடாது என்பதில் கூடுதலாகவே ஜாக்கிரதையாக இருக்கிறேன்.

எனவே சில சம்பவங்கள் உண்மை பெயர்கள் கற்பனை! பெயர்கள் உண்மையாக அடைகிற போது சம்பவங்கள் மட்டும் கற்பனையல்ல! தமிழ்ப் பாரம்பர்யங்களில் ஒன்றாய் 'கல்கி'யை நேசிக்கும் வாசக - வாசகிகளுக்கு என் இனிய தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்! 'தமிழ்' என்றதும் நினைவில்...

சமீபத்தில் ஒரு தமிழ் நடிகர் இன்னொரு தமிழ் நடிகருக்கு விட்ட சவால் சுவாரஸ்யம் "நீ 'தமிழ்'னு மட்டும் சரியா உச்சரி. அதுக்கே என் காதை அறுத்துக்கிறேன்!"

தமிழிலும் சிரிப்போம் -

தமிழ் சிறக்க!



கைக் குணத்துக்கும் முற்றும் மாறான காரியங்கள் சில நடந்து கொண்டு வருகின்றன. தமிழ் டாக்கிகளில் ஆபாசமான காட்சிகள் வருகின்றன.

ஆபாச டாக்கியினால் தமிழர்களின் பண்பாட்டுக்குக் கேடு வந்தது. அதைவிட அதிகமாக ஆபாசப் பத்திரிகைகளின் மூலமாக வந்தது. சினிமாக்காரர்களின் 'சொந்த வாழ்க்கை'களை ஆதாரமாகக் கொண்டு முதலில் அத்தகைய ஆபாசப் பத்திரிகைகள் எழுந்தன. பிரபலஸ்தர்களைப் பற்றிய நல்ல விஷயமானாலும், கெட்ட விஷயமானாலும் அதைத் தெரிந்துகொள்ள ஆவல் கொள்வது மனித இயற்கை. அந்த மனித இயற்கையையொட்டி ஆபாசப் பத்திரிகைகளுக்குக் கிராக்கி ஏற்பட்டது.

# போகும் வழி என்ன?

பத்திரிகாசிரியர் தலைவர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி சென்ற வாரத்தில் சென்னை மாநகருக்கு விஜயம் செய்திருந்தார். அது சமயம் பத்திரிகைக்காரர் கூட்டமொன்றில் ஓர் அரிய பிரசங்கம் செய்தார்.

தற்சமயம் பத்திரிகை உலகத்துக்கு அவசியம் வேண்டிய பேச்சு அது; தமிழ் நாட்டுக்கு மிக முக்கியமான பேச்சு அது.

தமிழ்நாடு பண்பாட்டில் சிறந்த நாடு. தமிழ் மக்கள் பண்பாட்டில் சிறந்த மக்கள். பண்பாடு என்றால் என்ன? ஒரு நாட்டு மக்களின் பண்பாட்டு உயர்வை எதிலிருந்து அறியலாம்? அவர்களுடைய பேச்சின் தரத்திலிருந்து அறியலாம்; அவர்களது எழுத்தின் தரத்திலிருந்து அறியலாம்.

ஆனால், சில காலமாகத் தமிழ் மக்களுடைய பண்பாட்டுக்கும் இயற்


அமரர் கல்கி

இன்னும் சில பத்திரிகையாளர்கள் உண்மைக் கதை என்று சொல்லிக் கொண்டு பொய்க் கதைகளை ஆபாசமான விவரங்களுடனும் வர்ணனைகளுடனும் எழுதுகிறார்கள்.

பத்திரிகைச் சுதந்தரம் வேண்டும் என்று கேட்கும் நாம் இம்மாதிரி ஆபாச அவதூறுகளைத் தடுக்க ஏற்பாடு செய்ய வேண்டாமா? நாமும் தடுக்க மாட்டோம், சர்க்காரும் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்று சொன்னால், போகும் வழி என்ன?

எல்லாரும் ஒத்துழைத்து, "தமிழ்ப் பத்திரிகை" என்றாலே "உயர்தரப் பத்திரிகை" என்ற பொருள் ஏற்படுமாறு செய்தால், தமிழ் நாட்டுக்கு எவ்வளவு கௌரவமாயிருக்கும்!

**— 'கல்கியின் சிறந்த கட்டுரைகள்' புத்தகத்திலிருந்து, பாவை வெளியீடு**

ஜவகல் ஸ்ரீநாத்தின் ரெக்கார்ட் தொங்கலில் விடப்பட்டுள்ளது. பத்தாண்டுகளுக்கும் மேலாக வியர்வை சொட்டச் சொட்ட கிரிக்கெட் ஆடியதில் அவர் வசம் மிஞ்சியிருப்பது ஒரே ஒரு சாதனை. அதுவும் உலக சாதனை. பத்தொன்பது மேட்சுகளில் முட்டை ரன்கள் அடித்த மகத்தான சாதனை. ஆனால் பாருங்கள், நாற்பத்தொரு செஞ்சுரிகள் அடித்தும் ஆசை போகவில்லை சச்சினுக்கு. ஸ்ரீலங்காவுடன் அடித்த முட்டையோடு சேர்த்துக் குருவி சேர்ப்பதுபோல பதினெட்டு முட்டைகளைச் சேகரித்து விட்டார். ஸ்ரீநாத் சாதனைக்கு மிகப் பெரிய அச்சுறுத்தலாக விளங்குகிறார் சச்சின்.

அலையில்லாத கடல் ஒருபோதும் சிறந்த மாலுமிகளை உருவாக்குவதில்லை. டைட்டானிக் கப்பல் மூழ்கும் சமயத்திலும் அதன் மாலுமி தப்பியோடவில்லை. கப்பலோடு கப்பலாக உறைந்து போய்விட்டார். இந்திய அணியின் கேப்டனாக எவர் இருந்தாலும், ரசிகர்கள் அணியின் மாலுமியாக எண்ணியது சச்சினைத்தான். ஆனால், இந்த மாலுமி எத்தனை தடவை புயல்களோடு போராடி, கப்பலைக் கரை சேர்த்தார்?




**அடுத்த மேட்சிலாவது சச்சின் நூறு அடிக்க மாட்டாரா என்கிற நப்பாசை பல ரசிகர்களின் ஆழ்மனதில் இருக்கவே செய்கிறது!**

# சச்சின் இனி தேவையா?

'சாதனைகளுக்கு மட்டுமே ஆடுகிறார்' என்று உள்ளதை உள்ளபடி போட்டு உடைக்கிறார் இயன் சேப்பல். 'ஒரு காமெடி ஹீரோ மாதிரி தோற்றம் கொடுக்கிறார் சச்சின்' என்று மைக் ஆர்தர்டன் தன் பங்குக்குக் கல் எறிகிறார். 'சச்சின் நீ தோற்பதில் எந்தச் சங்கடமும் இல்லை. ஆனால், கொஞ்சம் கௌரவமாகத்தான் தோற்றுப்போயேன்' என்று ரசிகர்கள் ஒவ்வொரு முறையும் விட்டில் மாஸ்டரிடம் மன்றாடுகிறார்கள். பலன் பூஜ்ஜியம்.

35 டெஸ்ட் செஞ்சுரிகள், 41 ஒன்டே செஞ்சுரிகள் என்று சச்சினுக்கு ரன் பேங்க் பேலன்ஸ் புஷ்டியாகவே உள்ளது. ஆனால், 2003க்குப் பிறகு சச்சின் கவலைக்குரிய மனிதராகக் காட்சியளிக்கிறார். தொடர்ந்து அவுட் ஆஃப் ஃபார்ம், உடல் பலஹீனங்கள் என அவர் இந்திய அணிக்கு ஒரு பெரும் சுமையாகவே இருந்திருக்கிறார். ஒவ்வொரு முறை அவுட் ஆகும்போதும் மிகவும் சிரமப்பட்டு அவுட் ஆவதுபோல உடல் அசைவுகள். பிட்சை சந்தேகமாகப் பார்ப்பார், பேட்டை வெறித்துப் பார்ப்பார், தடுமாறி எழுவார் என வீரனுக்கு உரிய அத்தனை அழகுகளையும் போகிற போக்கில் இழந்து போனார் சச்சின்.

'நான் அடுத்த உலகக் கோப்பையில் ஆடுவேன்' என்று பங்களாதேஷ் ஆப்புக்கு முன்பு பேட்டி கொடுத்திருந்தார். இந்தியா உலகக் கோப்பையிலிருந்து வெளியேறி பத்து நாட்களுக்கு மேலாக ஆகியும் இந்திய அணி சார்பாக ஒருவர் கூட ரசிகர்கள் மனதுக்கு ஒத்தடம் கொடுக்க முன்வரவில்லை, சச்சின் உட்பட. பாகிஸ்தானின் இன்ஸமாம் தேவலாம்.

சீனியர் என்கிற வார்த்தையே இந்திய கிரிக்கெட் அணியின் புண்ணியத்தால் கெட்ட வார்த்தையாகிவிட்டது. ஆனால் ஷேன் வார்னே, ஜெயசூர்யா, மெக்ராத் போன்ற சீனியர்கள் இன்றைக்கும் தங்கள் அனுபவத்தை சாதனைகளாக மாற்றிக்கொண்டுதானிருக்கிறார்கள்.

சச்சினிடமிருந்த 'மிஸ்டர் கன்ஸிஸ்டன்ஸி' பட்டம் யுவராஜ் வசம் சென்று நீண்ட நாளாகிவிட்டது. சென்ற வருடம் தொடர்ந்து மூன்று சீரியஸில் 'மேன் ஆஃப் தி சீரியஸ்' பட்டங்களை தட்டினார் இவர். யுவராஜ் கீழே விழும் நேரங்களில் இந்தியா கையூன்றி எழுந்ததாக அண்மையில் எந்த ஆதாரமும் இல்லை.

சரி, இந்த உலகக் கோப்பையால் உண்டான காயங்கள் டெண்டுல்கரை என்ன செய்யும்? சீறி எழுந்து தம்மை விமர்சனம் செய்பவர்கள் முகத்தில் சிக்ஸர் அடிக்கப் போகிறாரா அல்லது அடுத்த சச்சின் உருவாவதற்கு வழி விடப் போகிறாரா?

போகிறது தொலையுங்கள். அடுத்த மேட்சிலாவது சச்சின் நூறு அடிக்க மாட்டாரா என்கிற கடைசி நப்பாசை பல ரசிகர்களின் ஆழ் மனத்தில் இருக்கவே செய்கிறது. இதோ கைக்குட்டை. வரும் மே மாதம் பங்களாதேஷ் செல்லவிருக்கிறது இந்திய அணி. இதன் பொருட்டு ஜவகல் ஸ்ரீநாத்தின் சாதனைக்கு மட்டும் எந்த உத்தரவாதமும் தர முடியாது.

- ச.ந.கண்ணன்

# பாதையெல்லாம்



# பூக்களிட்டு...

‘ஈ’, ‘டிஷ்யூம்’ இரண்டு படங்களின் படப்பிடிப்புகளும் அடுத்தடுத்து நடந்து கொண்டிருந்தன. ஓய்வு, ஒழிச்சல் இல்லாமல் நான் படப்பிடிப்பில் கலந்து கொண்டிருந்த நேரத்தில்தான், சைப்ரஸ் நாட்டில் நடந்த திரைப்பட விழாவில் ‘ராம்’ படத்துக்கு விருது கிடைத்தது. இங்கே படப்பிடிப்பை விட்டுவிட்டு என்னால் சைப்ரஸுக்குச் செல்ல முடியாமல் போய்விட்டது. அவ்வளவு ஏன்? இங்கே, கோவாவில் டைரக்டர் மணிரத்னம் துவக்கி வைத்த திரைப்பட விழாவில், இந்தியன் பனோரமாவில் ‘ராம்’ படம் திரையிடப்பட்டபோதுகூட என்னால் கலந்து கொள்ள முடியாத நிலை.

‘டிஷ்யூம்’ படத்தின் ‘டைலமோ டைலமோ’ பாட்டுக்கான படப்பிடிப்பு ஆரம்பித்து பாதிக்கு மேல் எடுத்து முடிக்கப்பட்டுவிட்டது. அதன் பிறகு பாடலைத் தொடர்ந்து எடுக்க முடியவில்லை.

**ஆக்ஷன் ஸ்டார் ஜீவா**

## புதிய பகுதி

**வழுக்கை நீங்க வழி சொல்லு தலைவா?**
**- எம்.கோபி, சென்னை - 83**

ஆரம்பமே வழுக்கையா? ம்... எப்படி 'முடி'யும்னு பார்க்கலாம். ஃபர்ஸ்ட் ஆஃப் ஆல் நான் 'தலை'வா இல்லை. 'தலை' போ! 'பசு நாக்கால் நக்க பாழும் வழுக்கை போய் - புசு புசு முடி வளருமாமே'ங்கிற வெறுந்தலை சித்தனார் செய்யுள் படிச்சேன். உடனே எங்க வீட்டுக்கு பால் ஊத்துற கோனாரோட பசு மாட்டை ஒரு வாரம் வாடகைக்கு எடுத்து என் தலை வழுக்கையை விடாம நக்கச் சொன்னேன். வாரக் கடைசியில கோனார் வந்து என்னைக் கெட்ட வார்த்தையில் திட்டி பசுவை வாய் திறக்கச் சொன்னார். என் தலையெழுத்து பாருங்க. பசு நாக்குல புசு புசுன்னு முடி.

**மருந்து சாப்பிடும்போது குரங்கை நினைக்கலாமா?**
**- ஆர்.கிருஷ்ணன், மதுரை**

மறக்காம நினையுங்க. நாம நினைச்ச குரங்கு ஹனுமாரா இருந்ததுனா, நாம சாப்பிட்ட மருந்து சஞ்சீவியா மாறும்.

**நொந்து கிடக்கும் நமது கிரிக்கெட் வீரர்களை சந்தோஷப்படுத்த ஒரு ஜோக் ப்ளீஸ்?**
**- எஸ்.சூரிய நாராயணன், பொள்ளாச்சி**

என்ன விளையாடறீங்களா? சரிசரி... அவங்கதான் சரியா விளையாடலை. அட்லீஸ்ட் நீங்களாவது விளையாடுங்க. நியாயமா பார்த்தா நொந்து கிடக்கறது நாம சார். நம்மளை சந்தோஷப்படுத்த அவங்க இல்லை ஜோக் அடிக்கணும்! ஒருவிதத்துல தோத்ததும் நல்லது. விடிய விடிய மேட்ச் பார்த்து அல்சர் அசிடிடினு திண்டாடுவோம். அதுக்கான மருந்து விளம்பரத்துல இவங்களே வந்து 'ஜெலுசில் சாப்பிடுங்க'ம்பாங்க. தேவையா?

**விவாகரத்து அதிகரிக்குதே...**
**- இராம.சரவணன், தூத்துக்குடி**

கணவன் - மனைவிக்கு இடையே விவகாரங்கள் ரத்தானால் விவாகம் ரத்தாகாது.

என் தாத்தா பார்க்கச் செக்கச் செவேல் என்று ராஜா மாதிரி இருப்பார். என் பாட்டி நிழலுக்குச் சேலை கட்டி பொட்டு வைத்தது போல கறுப்பாக இருப்பார். ஆனால், அறுபது வருடங்களாக என் தாத்தா தனது ராணியான பாட்டியை நிழல்போலத் தொடர்ந்தார். சொல்லித் தெரிவதில்லை தாம்பத்யக் கலை.

**முத்தம் கொடுத்து அறை வாங்கிய துண்டா?**
**- ம.ஹரிகிருஷ்ணன், சென்னை**

வெளியூர் சென்றிருந்தபோது ஒரு ஹோட்டல் ஓனர் நிர்தாட்சண்யமாக ரூம் கொடுக்க மறுத்தார். அப்போது எதேச்சையாக அங்கு வந்த ஓனரின் பெண்ணை ஓஹோ என்று பாராட்டி, ஸாரி... கொஞ்சம் ஓவராகக் கட்டிப் பிடித்து முத்தமும் கொடுத்துவிட்டேன். ஈன்றபொழுதில் பெரிது உவந்த ஓனர் முத்தாய்ப்பாக எனக்குத் தங்க அறை கொடுத்தார். என்ன, அறை வாங்கிக் கொடுத்த அந்தப் பெண்ணின் வயது ஆறு அல்ல, அறுபது! அதற்காக ஆறிலிருந்து அறுபது வரை முத்தம் கொடுத்து விடாதீங்கள். பிறகு அறை அல்ல முழுசே கிடைக்கும், ஜாக்கிரதை!

**9......?**
**- எஸ்.செல்வம், ஆரணி**

இது என்ன புது மாதிரியான புள்ளிக் கோலமா...? மங்கையர் மலருக்குப் போக வேண்டியது மாறி என்கிட்டே வந்துடுச்சுன்னு நினைக்கறேன். இல்லை இப்படியெல்லாம் கேட்டு, ஸாரி, போட்டு முகத்துல கரும்புள்ளி குத்த நினைக்கறீங்களா? ஆளை விடு சாமி. இந்த வாரத்துக்கு இந்தக் கேள்வியோட முற்றுப்புள்ளி.

---

**வாசகர்கள் தங்கள் கேள்விகளை போஸ்ட் கார்டில் மட்டும் அனுப்பவும்.**



# டிஷ்யூம்

# 14

காரணம் சென்னை நகரமே பெருமழை காரணமாக வெள்ளக்காடு ஆகிவிட்டது. ஒரு பாடலை எடுக்க ஆரம்பித்து, பதினைந்து நாட்களுக்குள் எடுத்து முடிக்க வேண்டும். அப்படி இல்லாமல் பதினைந்து நாட்களைத் தாண்டி பாடல் காட்சியை, தொடர்ந்து எடுக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால், பாடல் காட்சியில் நடனமாடிய ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்களுக்குக் கூடுதலாகப் பணம் கொடுக்க வேண்டும் என்று ஒரு விதி இருக்கிறதாம்! எனவே, மழை கொஞ்சம் நின்றவுடன் 'ஒரே ஒரு நாள் பாடல் காட்சியை எடுத்தால் பாடலும் முடிந்துவிடும்; அதிகப்படியான செலவும் இருக்காது' என்று ஒரு நாள் படப்பிடிப்புக்கு ஏற்பாடு செய்துவிட்டு எனக்குத் தகவல் சொன்னார் டைரக்டர் சசி.

இன்னொரு பக்கம் மழை காரணமாகத் தடைபட்டிருந்ததால், அன்றைய தினமே 'ஈ' படத்தின் 'தீப்பொறி' பாடலின் படப்பிடிப்பை நடத்தத் திட்டமிட்டிருந்தார் டைரக்டர் ஜனநாதன். இரண்டு பேரிடமும் பேசி, ஒரு ஷூட்டிங்கைப் பகலிலும், இன்னொன்றை இரவிலும் வைத்துக் கொள்ளும்படி கேட்டுக்கொண்டேன். இரண்டுமே 'செமட்ரில்' வாங்கும் டான்ஸ்கள். இப்படி ரொம்பக் கஷ்டப்பட்டுப் பண்ணின படங்கள் இரண்டுமே.

'ஈ' படத்தின் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தபோது, எனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவம், படத்தின் வெற்றி குறித்து பெரும் தன்னம்பிக்கையை என்னுள் ஏற்படுத்தியது. ஏவி.எம்.மில் ஷூட்டிங். நான் 'ஈ' மேக்-அப்பில் ஷூட்டிங் நடக்கும் தளத்துக்கு நடந்து சென்று கொண்டிருந்தேன். தளத்தின் நுழைவாயிலில் செக்யூரிட்டி என்னைத் தடுத்து நிறுத்தி, 'யார் நீ? உள்ளே ஷூட்டிங் நடக்குது. போகக் கூடாது' என்று சொன்னார். நான் சில வினாடிகள் மௌனமாக நிற்க, ஓர் உதவி டைரக்டர், 'இவர்தான் படத்தோட ஹீரோ!' என்றதும், செக்யூரிட்டி பயந்துவிட்டார்.

"உங்க வேலையைத்தானே நீங்க செஞ்சீங்க" என்று தட்டிக் கொடுத்துவிட்டு உள்ளே போனேன்.

டைரக்டர் ஜனநாதன் என்னிடம் 'ஈ' படத்தின் கதையைச் சொன்னபோது, 'பயோ-வார் பத்தி எல்லாம் தமிழில் படம் எடுத்து, அதுல நம்மை நடிக்கக் கூப்பிடறாங்களே!'' என்று எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. 'கண்டிப்பா நாம் இந்தப் படத்தைப் பண்றோம்' என்று சொன்னேன். வழக்கம்போல, நான் நடிக்க ஒப்புக்கொள்ளும் படங்களின் கதைகளை என் அப்பாவிடம் சொல்வேன். அதுபோல, 'ஈ' படக் கதையை நான் சொன்னபோது, அவர் டைரக்டர் ஜனநாதனைச் சந்திக்க விரும்பினார். அப்பாவிடம் ஜனநாதன் கதை சொன்னபோது, அவர் இந்தப் படத்தை சூப்பர்குட் பேனரிலேயே தயாரிக்கலாம் என்று சொன்னார். கடந்த தீபாவளியை என்னுடைய 'தலை தீபாவளி' என்று கூறலாம். அப்போதுதான் 'ஈ' ரிலீஸ். ரசிகர்கள் பெரிய அளவில் அங்கீகாரம் அளித்தது என்னை உயரத்தில் தூக்கி வைத்துவிட்டார்கள்.

**"அரசியல்வாதிகள் தமிழ் தமிழ் என்று முழங்கிக்கொண்டு, ஏதோ தாங்கள்தான் தமிழ் மொழியைக் காப்பாற்றிக் கொண்டிருப்பதாகப் பறைசாற்றுகிறார்கள்!"**

இந்தப் படத்துக்கு முன்பே திட்டமிட்டிருந்த படம் 'அரண்'. பாதுகாப்பு அமைச்சகத்தின் அனுமதி வாங்கி காஷ்மீரில் படப்பிடிப்பு நடத்த வேண்டும். முதலில் செப்டெம்பர் மாதம் ஆரம்பிக்கலாம் என்று நினைத்தாலும் அங்கே அப்போது கடும் குளிர் நிலவும்

என்பதால் படப்பிடிப்பு தள்ளிப் போனது. கடைசியாக, கடந்த வருடம் மார்ச் இறுதி வாரம் ஆரம்பித்து, சுமார் ஒரு மாதத்துக்குப் படப்பிடிப்பு நடந்தது. மோகன்லால் சாருடன் சேர்ந்து நடிக்கப் போகிறோமே என்று எனக்குக் கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது. முதல் நாள் படப்பிடிப்பின்போது, எனக்கு வார்த்தைகள் தடுமாறின. அவர் மிகவும் எளிமையான மனிதர், பழகுவதற்கு இனிமையானவர் என்று அவரைப் பார்த்த அன்றே நான் புரிந்து கொண்டு விட்டேன். படத்தில் நானும் அவரும் ராணுவ அதிகாரிகள். அவருடைய ஜூனியரான எனக்கு அவர் பல விதங்களில் வழிகாட்டியாகவும், இன்ஸ்பிரேஷனாகவும் இருப்பார். க்ளைமாக்சில் அவருக்காக நான் உயிர்த் தியாகம் செய்வதுபோல் நல்ல அழுத்தமான கதை.

## "முட்களிருந்தாலும் தாண்டிச் செல்லும் தைரியம் எனக்குண்டு!"



'அரண்' படத்தின் இயக்குனர் மேஜர் ரவி. இருபத்து நான்கு வருடம் ராணுவத்தில் பணியாற்றியவர். ஓய்வு பெற்ற பின், திரைப்படத் துறை மீது அவரது கவனம் திரும்ப, பிரபல இயக்குநர் பிரியதர்ஷனிடம் இணை இயக்குநராக இருந்திருக்கிறார். அவர் தனது ராணுவப் பணியின்போது நிகழ்ந்த ஓர் உண்மைச் சம்பவத்தைத்தான் 'அரண்' படமாக எடுத்தார். 'அரண்' படம், 'கீர்த்தி சக்ரா' என்ற பெயரில் மலையாளத்திலும் வெளியாகி, கேரளாவில் பெரிய அளவில் அங்கீகாரம் கிடைத்தது.

கடந்த வருடம் சில மாத இடைவெளிகளில் ஈ, டிஷ்யூம், அரண் என்று மூன்று படங்கள் வெளியாகி, எனக்குத் திரை உலகிலும், ரசிகர்கள் மத்தியிலும் நல்லதொரு பெயரை வாங்கித் தந்தன. அடுத்து ரிலீசான 'பொறி' படமும் ஒரு நல்ல பொழுதுபோக்குப் படமாக அமைந்தது. இப்போது நான் நடித்துக் கொண்டிருப்பது 'தமிழ் எம்.ஏ' இதில் என்னுடைய பெயர் பிரபாகர். தமிழில் எம்.ஏ. படித்து முடித்த இளைஞன். நாட்டில் அரசியல்வாதிகள் தமிழ் தமிழ் என்று முழங்கிக்கொண்டு, ஏதோ தாங்கள்தான் தமிழ் மொழியையே காப்பாற்றிக் கொண்டிருப்பதாகப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், ஒரு கல்லூரியில் முதுகலைப் பட்டப்படிப்பில் தமிழ் எடுத்துப் படித்த ஒரு மாணவன், என்ன நிலைக்கு ஆளாகிறான் என்று சொல்வதுதான் கதை. படத்தை, ராமசுப்பு என்ற திறமையான இளைஞர் இயக்கிக் கொண்டிருக்கிறார். நன்றாக உருவாகிக் கொண்டிருக்கிறது. ஜூலையில் படம் வெளியாகும்.

என்னுடைய திரைப்பட வாழ்க்கையில் நான் செல்ல வேண்டிய தூரம் நீளமானது. பாதையெல்லாம் பூக்களிட்டிருந்தால் மகிழ்ச்சிதான். முட்கள் இருந்தாலும் தாண்டிச் செல்லும் தைரியம் எனக்குண்டு. கைகொடுக்கவும் தோள் கொடுக்கவும் இருக்கவே இருக்கிறீர்கள் நீங்கள்... வேறென்ன வேண்டும்!

**தொகுப்பு : எஸ்.சந்திரமௌலி**

(முற்றும்)

# புன்னகை தேவை!



மீட்டிங் ஹாலிலிருந்து கேபினுக்குள் நுழைந்த மகாதேவனிடம், "சார்! ஒன்பது மணியிலிருந்து ஒரு லேடி வெயிட் பண்றாங்க. அனுப்பட்டுமா?" என்றான் ப்யூன் நாராயணன்.

"என்ன விஷயம்னு கேளுங்க."

நாராயணன் வெளியே காத்திருந்தவளை நோக்கிப்போன அதே வேளையில், திரைச்சீலையைச் சின்ன தாய் ஒதுக்கிவிட்டு, விசிட்டர்ஸ் ஹாலை நோட்டம் விட்டார் மகாதேவன். சராசரியான உயரம். சற்றே சிவந்த நிறம். காட்டன் புடைவை. வலக் கையில் வாட்ச். எல்லாரையும் போல் காலில் வெந்நீர் கொட்டிக்கொண்ட பரபரப்போ, நகம் கடித்து நேரம் போக்கும் சிறுபிள்ளைத்தனமோ இல்லாமல், கையோடு வைத்திருந்த புத்தகத்தில் ஆழ்ந்திருந்தாள். பவ்யமாய்க் குனிந்து விசாரித்த நாராயணனிடம், அவள் ஏதோ சிரிப்போடு சொல்லிக்கொண்டே எழுந்தாள்.

"உங்ககிட்டயே பேசிக்கிறேன்னு சொல்லிட்டாங்க ஸார்!"

"ஆல் ரைட்! அனுப்புங்க!"

"குட் ஆஃப்டர்நூன் ஸார்... ஐ ஆம் ரம்யா ஃப்ரம் SFDC; வாலண்டியர்..." அவள் புன்னகை மாறாமல் அறிமுகப்படுத்திக் கொண்டாள். புதுபுசுவென்று

கோபம் வந்தது மகாதேவனுக்கு. ஒரு டொனேஷன் கலெக்ட் பண்ண இத்தனை அழிச்சாட்டியமும், எக்ஸிக்யூட்டிவ் தோரணையில் ஒரு ட்ரேட் மார்க் அறிமுகமும்!

''என்ன? டொனேஷனா? ஒரு நாளைக்குப் பத்துப் பேர் கிளம்பிடறீங்க! சுத்த நியூசென்ஸ்! நீ எதுக்கு? வெள்ள நிவாரணமா? இல்ல, எத்தியோப்பியா, சோமாலியான்னு இண்டர்நேஷனல் கவலையா?" குரலில் அலட்சியம் வழிய எரிந்து விழுந்தார்.

"சார், ப்ளீஸ்... ஒரு ரெண்டு நிமிஷம் செலவு பண்ணி இதைப் பாருங்க..."

ஓரடி முன்வைத்து அவரிடம் சின்னக் கையேடு, நாலைந்து புகைப் படங்களை நீட்டினாள். ''வேற வேலை இல்லை!'' என்று முணுமுணுத்தபடி அந்தக் கையேட்டைப் புரட்டினார்.

SFDC– Society for Destitute Children. வெளிநாட்டிலிருந்து இயங்கும் ஒரு சேவை அமைப்பு. இந்தியாவில் எல்லா முக்கிய நகரங்களிலும் இவ்வமைப்பின் கிளைகள் உண்டு. சென்ற ஆண்டுக்கான ஜனாதிபதி விருதினைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

''ஸோ, இந்தியன்கிட்டயே காசு வாங்கி, அவங்களோட குழந்தைகளுக்கே சேவை? அதுக்கு கேன்வாஸ் பண்ண முந்நூத்தி சொச்சம் பேர்! தேவையா? என்ன படிச்சிருக்கே?"

"எம்.பி.ஏ. ஸார்... ஹ்யூமன் ரிசோர்சஸ்."

"டோட்டல் வேஸ்ட்!" முகத்திலடித்தாற் போல் சொல்லி, கையேட்டையும் மேஜை மேல் போட்டார்.

அவள் சிரித்தாள். "என்ன பண்ண முடியும் ஸார்? பெரிய பெரிய நிறுவனங்கள், வெளிநாட்டுத் தன்னார்வ அமைப்புகள் எல்லாருமே நிறைய, நிறையதான் வாரிக் கொடுக்கிறாங்க. ஆனா, அதையெல்லாம் மீறின தேவை இங்க வர்ற குழந்தைகளோடது.

சுனாமி, பஞ்சம், பட்டினி, போர், வெள்ளம் - இதெல்லாம்தான் சீரழிவுன்னு நாம வரையறுத்து வெச்சிருக்கோம். ஆனா, ரொம்பக் கொடுமையான ஒரு விஷயம் 'டொமஸ்டிக் வயலென்ஸ்'! பெண்களைவிட, முதியவர்களைவிட, முக்கியமா இதனால பாதிக்கப்படறது குழந்தைகள்தான்! அப்புறம் அடலசன்ட்ஸ்!''



"பெண்களைவிட, முதியவர்களைவிட முக்கியமா இதனால பாதிக்கப்படறது குழந்தைகள்தான்!"

யார் யாரோ செய்த தவறுகள், யார் மேலேயோ உள்ள கோபங்கள் எல்லாம் காரணமே தெரியாத இவங்கமேல திரும்பும்போது, வீட்டைவிட்டு வெளியேறிடறாங்க. வெளியேறி, வாழணும்ங்கிற ஒரே காரணத்துக்காக எந்த எல்லைகளுக்கும் போறாங்க...'' என்றவள்,

"ப்ளீஸ்!..." என்று அவர் முன்னால் இன்னமொரு ஃபைலையும் வைத்தாள்.

"ஒரு வேளைச் சாப்பாடு போட்டு, ஸ்வீட் கொடுத்தா சரியாப் போயிடுமா?"

ஃபைலை விரல் நுனியால் ஒதுக்கினார்.

"ரொம்ப நியாயமான கேள்வி. பசி, பட்டினின்னு வெளியே வர்ற குழந்தைகள் ரொம்பக் கம்மிதான். அந்த

ரோஷினி

மாதிரி சூழ்நிலை வரும்போது, ஏதாவது ஒரு தொழில் பண்ணி, சம்திங்... ஏதாவது செஞ்சு குடும்பத்துக்குன்னு உழைக்க முன் வருவாங்க... நிறைய உதாரணங்கள் இருக்கு!''

''தென்?'' அவர் யோசனையாய் அவளைப் பார்த்தார். ''டெல் மீ! கேஷ் ஆர் செக்? வாட் டு யூ வான்ட்?''

அவள் புன்னகையின் நீளம் இன்னும் கூடியது.

''ஒரு கர்ட்டஸி! சின்னப் புன்னகை! பொறுமையா அவங்க சொல்றதையும் கேட்கற பெரிய மனசு! எப்போதாவது ஓர் அன்பளிப்பு! தன்னம்பிக்கையையும் தைரியத்தையும் வாரிக் கொடுக்கிற ஒரு திறமையான வழிகாட்டுதல்!''

அவர், அவளை ஆச்சர்யமாய்ப் பார்த்தார். அவள் வந்தது முதல் பேசியவை அனைத்துமே- ஒரு மாறுபட்ட கண்ணோட்டத்துடன் அமைந்திருந்த விதம் அவரைக் கவர்ந்தது. முதல் முறையாய்!

''ப்ளீஸ் ஸார்! ஒரு முப்பதே நிமிஷம் எனக்காக, எங்க குழந்தைகளுக்காக நீங்க மாசாமாசம் செலவழிக்கணும்! உங்க நேரத்தை இந்தக் குழந்தைகளுக்காகவும் ஒதுக்கணும்!

நாய்க்கு ரொட்டி மாதிரி வேளைக்குச் சாப்பாடுங்கிறதெல்லாம் சரியா வராது! தே நீட் டு ப்ளே, ஷேர், என்ஜாய்... இல்லையா? தே டு ஆர் ஹ்யூமன்ஸ்... இயல்பான வாழ்க்கை அவங்களுக்கும் வேணுமே!''

அயர்ந்து போனார் மகாதேவன். வித்தியாசமான, விநோதமான என்றாலும் மிக நியாயமான கோரிக்கை! மறுப்பதற்கில்லை! மறுப்பவன் மனிதனுமில்லை!

''இது எங்க கார்ட்! ப்ளீஸ்... கான்டாக்ட் எனி டைம்!'' விசிட்டிங் கார்டை நீட்டிவிட்டு மீண்டும் ஒரு புன்னகையோடு விடைபெற்றாள். அவள் காட்டிய பொறுமையும் நிதானமும் பளிச் புன்னகையும் நோக்கமும் - அவருள் எதை எதையோ கலைத்துப் போட்டுத் தூர்வாரிக் கொண்டிருந்தன.

'ப்ச்! அவளை உட்காரவெச்சாவது பேசியிருக்கலாம்!' என்று உள்ளிருந்து கேட்ட குரல், வெகுநேரம் வரை அவரை அலைக்கழித்தது!

**அவள் காட்டிய பொறுமையும் நிதானமும் பளிச் புன்னகையும் நோக்கமும் அவருள் எதை எதையோ களைத்துப் போட்டுத் தூர் வாரிக் கொண்டிருந்தன**









நாம் நம் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக்கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தை எல்லாம் நிர்மாணிக்கிற புத்தியும், சக்தியும் கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் ஸ்வாமி.

ஒன்றிலிருந்து ஒன்றாகச் சக்தி அதிகமாகிக்கொண்டே போகிற இயற்கையிலிருந்து இப்படி ஈசுவர தத்துவத்துக்குப் போகிறோம்.

ஒன்றுக்கு ஒன்று மாறாக, Pair or opposites என்கிற எதிரெதிர் சக்தி ஜோடிகளையும் நாம் இயற்கையில் பார்க்கிறோம். கடும் பனிக்காலம் என்று ஒன்று இருந்தால், கடும் வெயில் காலம் ஒன்று இருக்கிறது. இரவு என்று ஒன்று இருந்தால், பகல் என்பதாக ஒன்று இருக்கிறது. மிருதுவான புஷ்பங்கள் இருப்பதுபோல் கூரான முட்கள் இருக்கின்றன. தித்திப்புக்கு மாறாகக் கசப்பு

# இரவும் பகலும்!

இருக்கிறது. அன்புக்கு எதிராகத் துவேஷம் இருக்கிறது. எதற்கும் எதிர்வெட்டாக ஒரு மாற்று இயற்கையில் இருக்கிறது. இந்த ரீதியில் ஆலோசனை செய்தால், மனித மனசுக்கு மாற்றாகவும் ஒன்று இருக்கத் தானே வேண்டும்? மனித மனசின் சுபாவம் என்ன? ஆசாபாசங்களில் முழுகிச் சஞ்சலித்துக்கொண்டே இருப்பது; திருப்தியே இல்லாமல் தவிப்பது. இதற்கு மாறாக ஆசாபாசமின்றி, சஞ்சலமே இன்றி, சாசுவத சாந்தமாகவும் சௌக்கியமாகவும் திருப்தியாகவும் இருக்கிற வஸ்துவும் இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட வஸ்துதான் ஸ்வாமி.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**



அருள்வாக்கு



தஞ்சாவூர், கார்த்திக் ஜெ.குமார்



கும்பகோணம்,
ஆர்.விஜயகுமார்



னாமதுரை,
.சுரேஷ்குமார்



கும்பகோணம், வி.நவீன்ராஜ்

கல்கி 28.1.2007 இதழில் அறிவித்த போட்டோ போட்டிக்கு வந்திருந்த நூற்றுக் கணக்கான புகைப்படங்களுள் ரூ.250/- பரிசு பெறும் சிறந்த எட்டுப் படங்கள் இங்கே பார்வைக்கு...

25

# வதரி வணங்குவோம்

பத்ரிகாசிரமத்துக்குப் போவது இப்போதெல்லாம் ரொம்பச் சுலபம். உங்கள் ஊரிலிருந்து பிரயாணத் தரகர்களிடம் சொல்லி வைத்தால் ரயில் டிக்கெட், வசதியுள்ள பஸ், கூடவே சமையற்காரர்கள், வேளா வேளைக்கு காபி, டிபன், சாப்பாட்டுடன் அழைத்துச் சென்று நாராயணனை தரிசனம் செய்வித்து அலகனந்தா நதியில் நீராட வைத்து நீத்தாருக்கும் சேர்த்துப் புண்ணியம் சேகரித்து வர ஏற்பாடு செய்வார்கள். திருமங்கை ஆழ்வார் காலத்தில் பத்ரிகாசிரமம் செல்வது அத்தனை சுலபமாயிருக்கவில்லை. காட்டுப் பாதை. நல்ல ரோடு கிடையாது. மிருகங்களின் மிரட்டல், குளிர். இதனால் சின்ன வயசிலேயே உடம்பில் தெம்பு இருக்கும்போதே சென்று வணங்குவோம் என்று பாடியிருக்கிறார். பெரிய திருமொழியில் 'முற்ற மூத்துக்கோல்' என்ற பத்துப் பாசுரங்களில் வய

## வாரம் ஒரு பாசுரம்





சாவதன் அறிகுறிகளை அத்தனை நுட்பமாக விவரித்துள்ளார்.

'முற்ற மூத்து, கோல் துணையா,
முன்னடி நோக்கி வளைந்து,
இற்றகால் போல், தள்ளி, மெள்ள
இருந்து அங்கு இளையாமுன்,
பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி
பெரு முலை ஊடு, உயிரை
வற்ற வாங்கி உண்ட வாயான்
வதரி வணங்குதுமே'

வயசு முற்றிப்போய், கம்பைத் துணையாகக்கொண்டு முன்நோக்கி வளைந்து கால் இற்றுப்போனது போல தள்ளி மெள்ள அங்கங்கே உட்கார்ந்து இளைப்பாறுமுன்னே... பத்ரிகாசிரமம் சென்று வணங்குவோம்! அடுத்த பாட்டில், முதுகைப் பிடித்துக்கொண்டு முன்னால் கோல் ஊன்றி, விதிர்விதிர்த்து (நடுங்கி) கண் சுழன்று, மேல்மூச்சு வாங்கி இருமி... இப்படி முதுமையின் கொடுமைகளை அழுத்தமாகச் சொல்வதற்கு முக்கிய காரணம் - தாமதிக்காதீர்கள்; இளம் வயதிலேயே போய் தரிசித்துவிடுங்கள் என்பதை உணரவைப்பதே. பயப்படாதீர்கள். இப்போது எந்த வயசிலும் செல்லலாம். நான் ஐம்பது வயசானப்புறம் தான் சென்றேன். டில்லியிலிருந்து எங்களை அழைத்துச் சென்ற டூரிஸ்ட் கார் டிரைவரின் பெயர் நாராயண் சிங்.

(படிக்கலாம்)

**சுஜாதா**

# திருப்பூர் திகுதிகு!




முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவும், தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சர் மு.க.ஸ்டாலினும் தீவிர அறிக்கைப் போர் நடத்துகிற அளவுக்கு, திருப்பூரில் விஸ்வரூபம் எடுத்துள்ளது தினசரி மார்க்கெட் கட்டும் பிரச்னை.

திருப்பூர் நகராட்சி பேருந்து நிலையத்துக்கு எதிரே, நாற்பது வருடங்களாக இயங்கி வருகிறது தினசரி மார்க்கெட். ஈஸ்வரன் கோயில் வீதியில் செயல்பட்டு வருகிறது பூ மார்க்கெட். இந்த இரண்டின் பழைய கட்டடங்களையும் இடித்துவிட்டு, நவீன வணிக வளாகக் கட்டடம் கட்டுவதற்கு அ.தி.மு.க. ஆட்சியில் திட்டமிடப்பட்டது. நடுத்தர நகர அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் கடனுதவி அளிக்க டுஃபிட்கோ (TUFIDCO) வங்கி, நான்கு கோடி ரூபாய் தர ஒப்புதல் அளித்தது.

நவீன வணிக வளாகக் கட்டடம் என்பது, அண்டர்கிரவுண்டில் கார் பார்க்கிங், தரைக்கு ஐந்தடி உயரத்தில் முதல் தளம் மற்றும் இரண்டாம் தளம் ஆகியவை அடங்கியது. 2002-ல் திட்டம் அறிவிக்கப்பட, 2003-ல் கடைகளைக் காலி செய்ய வேண்டுமென வியாபாரிகளுக்கு நோட்டீஸ் தரப்பட்டது. வியாபாரிகள் சென்னை உயர்நீதிமன்றத்தில், வணிக வளாகக் கட்டடம் கட்டத் தடை கோரி தொடர்ந்த வழக்கு வாபஸ் பெறப்பட்டது. இருந்தபோதிலும், வளாகக் கட்டடம் கட்டுவதில் வியாபாரிகள் தொடர்ந்து கடும் எதிர்ப்பு தெரிவித்தே வந்துள்ளனர்.

இந்நிலையில், திருப்பூரில் கட்டடம் கட்ட வேண்டுமென அ.தி.மு.க.வினர் ஒரு நாள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தினர். இரண்டு நாட்கள் கடந்த நிலையில், அ.தி.மு.க.வைக் கண்டித்து அதே இடத்தில் தினசரி மார்க்கெட் வியாபாரிகள் ஒரு நாள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தினர்.

இதைப் பற்றி மேலும் விவரம் அறிய, திருப்பூர்ப் பிரமுகர்களைச் சந்தித்துப் பேசினோம்.


* க.செல்வராஜ்


* ஆர்.பாலசுப்பிரமணியன்


* என்.சண்முகசுந்தரம்

# மண்டை காய வைக்கும் மார்க்கெட் பிரச்னை!

"இந்தத் திட்டம் அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் கொண்டு வரப்பட்டது. மார்க்கெட் வியாபாரிகளில் எண்பது சதவிகிதத்தினர் தி.மு.க.வின் பினாமிகள் என்பதால், அப்போதிருந்தே இத்திட்டத்துக்கு எதிர்ப்பு இருந்து வந்துள்ளது. தி.மு.க. ஆட்சிக்கு வந்தவுடன், வளாகப் பணிகளுக்கான டெண்டர் விடப்பட்டது. ஆனால், தி.மு.க. நகர மன்றத் தலைவரின் முயற்சியினால், திட்டம் ரத்து செய்யப்பட்டுவிட்டது. இதனைக் கண்டித்துத்தான் முன்னாள் முதல்வர் ஜெயலலிதா அவர்கள் கண்டன அறிக்கை வெளியிட்டார். சில மாற்றங்களைச் செய்து கொண்டு திருப்பூரில் நவீன வணிக வளாகக் கட்டடம் அமைய வேண்டும்" என்றார் முன்னாள் திருப்பூர் (அ.தி.மு.க.) சட்டமன்ற உறுப்பினர் சிவசாமி.

"பொதுமக்கள் போக்குவரத்துச் சிரமமின்றி காய்கறி மற்றும் மளிகைப் பொருட்களை வாங்கிச் செல்ல, தற்போதிருக்கும் தினசரி மார்க்கெட் அமைப்பே மிகவும் சிறந்தது. காய்கறிகள் அழுகிக் கழிவுகள் சேரும் என்பதால், மாடிக் கட்டடங்களில் கடைகள் வைத்து விற்கும்போது, சுற்றுச் சூழல் சுகாதாரமாக இருக்காது. யாருக்கும் சிரமம் இல்லாத வகையில் புதிய கட்டடங்கள் கட்டித் தர வேண்டும்" என்கிறார் நல்லூர் நுகர்வோர் நலமன்றத்தின் தலைவர் திருப்பூர் சண்முகசுந்தரம்.

"புதிய கட்டடம் கட்ட கடந்த அ.தி.மு.க. ஆட்சியில், 2002-ல் நகர மன்றத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சுமார் மூன்று ஆண்டுகள் கழித்தே அதற்குத் தொழில்நுட்ப அனுமதி வழங்கப்பட்டது. அதன் பின்னர் மூன்று முறை ஒப்பந்தப் புள்ளிகள் கோரப்பட்டும் எவரும் விண்ணப்பிக்காத நிலையில், நான்காம் முறை பெறப்பட்ட ஒப்பந்தப்புள்ளி அடிப்படையில் தி.மு.க. ஆட்சியில்தான் வேலை உத்தரவு அப்போதைய நகர மன்றத்தால் வழங்கப்பட்டது. ஆனால்,





★ சிவசாமி

**நவீன வணிக வளாகம் வரும்போது வாடகை பத்து மடங்கு உயர்ந்துவிடும். அப்படி வாடகையையோ, முன்பணத்தையோ வியாபாரிகளால் கட்ட முடியாதே!**

அதற்கான நிதி வசதியை மார்ச் 2007-க்குள் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தமும் இருந்தது. அதனால்தான் வேறு நிதி உதவித் திட்டத்தின் கீழ் நிதி ஆதாரம் பெற்று, மார்க்கெட் வியாபாரிகளின் விருப்பத்துக்கேற்ப தரைத் தளத்திலேயே வணிக வளாகம் அமைத்திட முடிவு செய்யப்பட்டுள்ளது'' என்று ஜெயலலிதாவுக்கு மறுப்பு தெரிவித்திருக்கிறார், உள்ளாட்சித் துறை அமைச்சர் ஸ்டாலின்.

"இங்கு சுமார் நானூறு கடைகள் இருக்கின்றன. வணிக வளாகம் என்கிற பெயரில் வரும்போது, இப்போதிருக்கும் கடைக்காரர்களுக்கு அப்படியே கடைகள் தருவதாக அரசு எந்த உத்தரவாதமும் தரவில்லை. வாடகையும் பத்து மடங்கு உயர்ந்துவிடும். அப்படி வாடகையையோ, முன்பணத்தையோ வியாபாரிகளால் கட்ட முடியாதே! தரைத் தளத்தில் மட்டுமே கடைகள் கட்டித் தர வேண்டும்" என்கிறார் திருப்பூர் தினசரி மார்க்கெட் வியாபாரிகள் சங்கத் தலைவர் பாலசுப்பிரமணியன்.

இதைப் பற்றி திருப்பூர் நகர மன்றத் தலைவர் (தி.மு.க.) செல்வராஜிடம் பேசினோம்.

"இப்போது தரை தளத்தில் மட்டுமே இயங்கி வரும் கடைகளை, அடுக்குமாடிக் கடைகளில் நடத்த தினசரி மார்க்கெட் வியாபாரிகள் எவரும் விரும்பவில்லை. காரணம், வாடகை உயர்வு. பொது மக்களுக்கும் அசௌகர்யம். டுஃபிட்கோவின் நிபந்தனைப்படி, மார்ச் 2007-க்குள் வளாகப் பணிகள் நிறைவு பெற்றிருக்கப்பட வேண்டும். ஆனால் இன்னும் பணிகள் துவக்கப்படவே இல்லையே. இச்சூழலில்தான் நகர மன்றம் அத்திட்டத்தினை ரத்து செய்தது. பொதுமக்கள் மற்றும் வியாபாரிகளின் நலனைக் கருத்திற்கொண்டு, தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சரின் வழிகாட்டுதலின்படி புதிய தினசரி மார்க்கெட் கட்டடப் பணிகளுக்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படும்!'' என்றார் செல்வராஜ்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு





# “ஓசைக்கு நான் அடிமை!”

சன் மியூசிக்கில் தமிழைக் காயப்படுத்தாமல் பேசும் சொற்ப அளவிலான தொகுப்பாளர்களில் ஆனந்த கண்ணன் முக்கியமானவர். நேயர்களிடம் பேசும்போது 'அழைத்தமைக்கு நன்றி' என்று குழைவு கூட்டிப் பேசுவார். ரகசியம் - தமிழ் இன்னமும் மாசுபடாமல் இருக்கும் சிங்கபூரிலிருந்து சென்னைக்குப் பறந்து வந்தவர் இவர்.

“சிங்கப்பூரில் யாராக இருந்தாலும் அவர்களது தாய்மொழியைக் கற்றாக வேண்டும். உதாரணமாகத் தமிழர்கள் தமிழைப் பள்ளியில் படிக்காவிட்டால், அந்த ஊர்க் கல்லூரிகளில் படிக்கத் தகுதியற்றவர்களாகிவிடுவர். சிங்கப்பூரிலுள்ள ஒருவருக்குத் தபால் அனுப்பும்போது, முகவரியைத் தமிழில் எழுதினால் சரியாகப் போய்ச் சேர்ந்துவிடும். அந்த அளவுக்கு அங்கு தமிழ் எல்லோருக்கும் பரிச்சயம். என் அப்பா ஐந்து வயதில் சிங்கப்பூர் சென்றவர். இருந்தும் அவர் தமிழை மறக்கவில்லை. தன் பெயரை வசந்த கண்ணன் என்று மாற்றிக் கொண்டவர், எனக்கு ஆனந்த கண்ணன், என் தம்பிக்கு கோபி கண்ணன், என் தங்கைக்கு நித்திலக்கன்னி என்று தமிழ் பொங்கும் பெயர்களாக வைத்துவிட்டார். என்னை, என் பெயரை உச்சரிக்கும் சைனாக்காரர்கள்தான் 'அந்தனகேணன்' என்றெல்லாம் வாய் குழறி உச்சரிப்பார்கள்.

ஆரம்பத்தில் சன் டீவியில் என் பெயரைப் பார்த்து, 'உன் பெயர் ஆண்ட்ரே, ஷ்யாம் என்று ஸ்டைலாக இருக்கும் என்றல்லவா நினைத்தோம்' என்று ஆச்சர்யப்பட்டனர். 'இல்லையில்லை. என் பெற்றோர் வைத்த பெயரிலேயே நிகழ்ச்சி பண்ணுகிறேன்' என்று கூறிவிட்டேன். சென்னைத் தமிழ், கொங்குத் தமிழ், மதுரைத் தமிழ் எல்லாம் கேட்கும்போது ஏதோ பாடல் கேட்கும் உணர்வு ஏற்படும். பருத்திவீரன் படத்தின் வசனங்கள் எல்லாமே குறும் பாடல்கள். தமிழில் சில வார்த்தைகளின் ஓசைக்கு நான் அடிமை. 'அழைத்தமைக்கு' என்கிற வார்த்தையை என் நிகழ்ச்சியில் ஓராயிரம் முறையாவது உபயோகித்திருப்பேன்.

தமிழ் தெரிந்தவர்களிடம் தமிழில் மட்டுமே பேச வேண்டும் என்கிற உறுதி கொண்டவன். தமிழில் பேசும்போதும் கேட்கும்போதும் ஏற்படும் சிலிர்ப்பை இன்னொரு மொழியால் கொடுத்துவிட முடியாது” என்கிறார் தமிழ் கண்ணன்... மன்னிக்கவும் ஆனந்த கண்ணன்.

— ச.ந.கண்ணன்

# தூங்குவதற்க

சினிமா கதாநாயகிகளுக்கு மிகவும் பரிச்சயமான ஒரு வஸ்து தூக்க மாத்திரை. 'பொசுக்'கென்றால் மேஜை டிராயரை இழுத்து வெள்ளை கலர் டப்பா ஒன்றை எடுப்பார்கள். விசும்பிக்கொண்டே மூடியைத் திறந்து அரை டஜன் மாத்திரைகளை உள்ளங்கையில் கொட்டிக் கொண்டு கடகடவென்று விழுங்கிவிடுவார்கள். அவ்வளவுதான்... கதைக்ளோஸ்! கதாநாயகன் விரைந்து வந்து காப்பாற்றினால், மறுநாள் விடிகாலை கண்ணைத் திறக்க முடியும். கொஞ்சம் பழைய படமாக இருந்தால் 'நான் இப்போ எங்கே இருக்கேன்?' என்ற டயலாக் வரும்.



நிஜத்திலும் கூட தூக்க மாத்திரைகள் சர்வ சாதாரணமாக எல்லாக் கடைகளிலும் கிடைக்கின்றன. பபிள்கம் மெல்வதுபோல் அசால்டாகத் தூக்க மாத்திரை சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

தூக்க மாத்திரை என்பது புளிப்பு மிட்டாய் வகையறாவைச் சேர்ந்தது அல்ல. கொஞ்சம் அசட்டையாக இருந்தாலும் பல பக்க விளைவுகளை ஏற்படுத்தக்கூடியது. சமீபத்தில்கூட, அமெரிக்காவில் மொத்தம் பதின்மூன்று வகையான தூக்க மாத்திரைகளின் லேபிள் மீது மண்டை ஓடு போடாத குறையாக ஓர் எச்சரிக்கை வாசகத்தை பிரிண்ட் செய்து அனுப்பியிருக்கிறார்கள். அந்த வாசகம் இதுதான். 'மருத்துவரின் அனுமதி இல்லாமல் சாப்பிட்டால் கடும் விளைவுகள் ஏற்படக்கூடும்.'

வழக்கமாக எல்லா மாத்திரைகள் மீதும் காணப்படும் வாசகம்தானே என்று நினைத்துவிட வேண்டாம். குறைந்தது, தூக்க மாத்திரைக்காவது கொஞ்சம் கூடுதல் மரியாதை அளிக்கலாம். காரணம், தூக்க மாத்திரை சாப்பிடும் வழக்கம் அதிகரிக்க அதிகரிக்க, உடல் உபாதைகளும் அதற்கேற்றாற்போல் அதிகரிக்கின்றன.

ஆம்பியன் (Ambien), லூனேஸ்டா (Lunesta). பிட்ஸாவுக்கு அடுத்தபடியாக அமெரிக்காவில் அதிகம் விற்பனையாகும் உணவுப் பொருள்கள் இவை. அதாவது தூக்க மாத்திரைகள். கடந்த ஆண்டு மட்டும் இந்த இரண்டும் 3 மில்லியன் டாலருக்கு விற்கப்பட்டுள்ளன. தூக்க மருந்துகளைச் சந்தையில் கொண்டு செல்ல மருந்து கம்பெனிக்காரர்கள் சென்ற



# ...முன் ஒரு நிமிடம்!

ஆண்டில் மட்டும் 600 மில்லியன் டாலர்கள் செலவழித்திருக்கிறார்கள்.

ஆம்பியன் என்னும் ஒரே ஒரு மாத்திரையை மட்டும் வைத்துக் கொண்டு நிறைய ஆய்வுகள் நடத்தியிருக்கிறார்கள். மருத்துவரின் ஆலோசனை இல்லாமல் இதை உட்கொண்ட பெரும்பாலானோர், ஏதோ ஒரு பக்கவிளைவால் பாதிக்கப்பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.

## மருதன்

தூக்க மருந்து உற்பத்தியாளர்களுக்கான நீண்ட உத்தரவு ஒன்று தயாராகியுள்ளது. அதன்படி, மருந்து லேபிளில் வெறுமனே எச்சரிக்கை என்று மட்டும் போடாமல், இதை விழுங்கினால் இன்னின்ன உபாதைகள் தோன்றும் என்று உற்பத்தியாளர்கள் குறிப்பிட வேண்டும். அதேபோல்தான் விளம்பரங்களிலும். 'ஒரே ஒரு மாத்திரை சாப்பிடுங்கள். சுகமாகத் தூங்குங்கள்' என்று சொல்லும்போதே, அதற்கான பக்கவிளைவுகளையும் சேர்த்தே சொல்ல வேண்டும்.

விற்பனையில் தற்போது முன்னணியில் இருப்பது ஆம்பியன். இவர்களது சென்ற ஆண்டு விற்பனை 27.6 மில்லியன் டாலர்கள். 44 மில்லியன் பேர் சமர்த்தாக மருந்துச் சீட்டைக் காண்பித்து இதை வாங்கிக்கொண்டு சென்றிருக்கிறார்கள். அடுத்த இடத்தைப் பிடித்துள்ளவர்கள் ரெஸ்டோரில் (Restoril). இவர்களது விற்பனை 7.3 மில்லியன் டாலர்கள்.

தொட்டதற்கெல்லாம் தூக்க மருந்துகளை எழுதிக் கொடுக்கும் மருத்துவர்களை ஆராய்ச்சியாளர்கள் மெலிதாகக் கடிந்து கொண்டிருக்கிறார்கள். 'இனிமேலாவது, பார்த்து நிதானமாக மாத்திரைகள் கொடுக்கவும்.'

தூக்கம் வரவில்லையா? பக்கவிளைவு இல்லாத மருந்து வேண்டுமா? ஒரே வழிதான். ஓடிச் சென்று அம்மாவின் மடியில் தலையை வைத்துப் படுத்துக் கொள்ளுங்கள். ●

அம்மாவிடம், அப்பாவிடம், சாந்தியிடம், தம்பியிடம்... இன்னும் யோசித்தால் வட்டச் செயலாளரிடம், எம்.எல்.ஏ.விடம், நண்பர்களிடம் என்று தனக்குத் தெரிந்த வட்டத்தில் இருக்கிற அத்தனை பேரிடமும் பேசவும் விவாதிக்கவும் தெளிவு பெறவும் நிறைய விஷயங்கள் இருப்பதாக முத்துராமனுக்கு எப்போதும் தோன்றும். ஆனால், பேசத் தொடங்கியதும் ஏதோ ஒன்று தடுத்துவிடுகிறது. சொல்ல வருவதைப் பனிச்சென்று போட்டு உடைக்க முடிந்ததில்லை இதுவரை.

என்ன தயக்கம்? அதுதான் புரியவில்லை. அவன் தன் அம்மாவிடம் சொல்ல விரும்பிய விஷயம் மிக எளிமையானது. 'அம்மா, நான் அரசியலில் தீவிரமாக ஈடுபட விரும்புகிறேன். மனசாட்சியைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டு வேலை பார்த்தாக வேண்டும். இன்னும் எளிமையாகவும் சொல்லலாம். வட்டச் செயலாளர் தொடர்பை வெட்டிவிடப் போகிறேன். இது சரியா?'

அம்மா தெளிவாகச் சொல்லிவிட்டாள். ''தபாரு, உங்கப்பன் ஆடாத ஆட்டத்த நீ ஆடிறப் போறதில்ல. மொதல்ல எலக்சன்ல சீட்டு கெடைக்குதா பாருடா; அப்பால ரோசிச்சிக்கலாம்'' சிரித்துவிட்டு, அவள் துவைத்து வைத்த துணிகள் நிறைந்த பக்கெட்டை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்து உலர்த்தினான். மதியச் சாப்பாட்டுக்குப் பிறகு கொஞ்ச நேரம் படுத்து எழுந்திருந்து முகம் கழுவி, தலை சீவி வெளியே வந்தவன், பக்கத்துச் சந்தில் சாலை போடும் பணியைப் பார்க்கப் புறப்பட்டான்.

அங்காளம்மன் கோயில் சந்தில் திரும்பும்போதே எதிரில் திபுதிபுவென்று நாலு பேர் ஓடி வருவதைப் பார்த்தான்.

''டேய் முத்து, எங்கடா பூட்ட? அங்க நம்மாளுங்கள அடிக்கறானுங்கடா...!''

திக்கென்றிருந்தது அவனுக்கு. அடிக்கிறார்களா? யார்?

''தெரியலடா... குப்பை அள்ளிக்கிட்டிருந்த எடத்துல யாரோ நாலு பேர் கமோவுல வந்தானுங்க. உருட்டுக்கட்டையும் கையுமா 'வேலைய நிறுத்திட்டுப் போங்க... இல்ல ஆத்துல பொணமாத்தான் விழுவீங்க'ன்னாங்க. எங்களுக்கு ஒண்ணும் புரியல.''

வேகப் பாய்ச்சலில் முத்துராமன் வேட்டியை மடித்துக் கட்டி ஓடினான். அவர்களும் பின்னாலேயே ஓடினார்கள்.

''நீங்க எத்தினி பேரு இருக்கீங்க? வந்தவங்களைப் போட்டு அமுக்கியிருக்க வேணாம்.... ஓடியாறீங்களே...?''

''ஆமா... வந்து பாரு தெரியும். அருவாளும் கையுமா நிக்கிறானுங்க. என்னாத்தப் போட்டு அமுக்கறது?''

அரிவாள். சட்டென்று அவன் தாமதித்தான். இது ஆபத்து. கண்டிப்பாக போலீஸ் வரும். விவகாரம் வரும்.

''எத்தினி பேரு நீங்க அங்க இருக்கீங்க?''

''ஆறு பேரு. நீ சொன்ன மாதிரி மெயின் குப்பமேட்ட க்ளியர் பண்ணிட்டோம். இன்னும் ரெண்டு குப்பமேடு இருக்குது. அதுக்குள்ள இவனுக வந்துட்டானுங்க. என்னா ஏதுன்னுகூட கேக்கல முத்து... வேலைய நிறுத்துங்கடான்னு கத்திக்கிட்டே வந்து அடிக்க ஆரம்பிச்சிட்டானுங்க. வண்டிக்குள்ளார இன்னும் எத்தினி பேரு இருப்பானுங்கன்னு கூட பாக்க முடியல...''

கால் ஓடிய வேகத்துக்கு முத்து

**''பேசிக்கிட்டுத்தானே இருக்காங்க? என்னாத்துக்கு மேல கைய வெக்கற?'' அவன் சற்றும் எதிர்பாராத விதத்தில் பொளேரென்று அறைந்தான் முத்துராமன்**





14



ராமன் சிந்தித்துக்கொண்டிருந்தான். இது அரசியல். கண்டிப்பாகத் திட்டமிட்டு யாரோ செய்வது. எம்.எல்.ஏ.வாகவே இருக்கலாம் அல்லது வேறு யாரோ சிங்காரவேல் அண்ணனுக்கு வேண்டாதவர்கள்.

ஆற்றங்கரைக்கு அவன் வந்து சேர்ந்தபோது நிலவரம் மோசமாகியிருப்பதாகப் பட்டது. குப்பத்து இளைஞர்கள் பத்திருபது பேர் அங்கே வந்து சேர்ந்திருந்தார்கள். சுமோவில் வந்த குண்டர்களைத் தனியே பிரித்து அடையாளம் காண முடியவில்லை. குப்பைமேட்டின் அருகே யார் யாரோ, யார் யாரையோ போட்டுத் துவைத்தெடுத்துக் கொண்டிருந்தார்கள். உருண்டு புரண்டு சண்டை போட்ட இரண்டு பேரையுமே தனக்குத் தெரியும் என்பதுபோலத் தோன்றியது முத்துராமனுக்கு.

''டேய்...டேய்'' என்று கத்திக்கொண்டே முன்னால் பாய்ந்தான்.

''முத்து... அடிச்சிட்டான் முத்து. இவனுங்கள சும்மா விடக்கூடாது முத்து. நம்ம சுப்பிரமணி தலைல அடிச்சிட்டான் முத்து... கட்டையால அடிச்சிட்டான்... மவன டேய்... உனுக்கு என் கையால தாண்டி சாவு... டேய், ஓடியாங்கடா...'' ஓடி வந்து ஏதோ சொல்ல வந்தவன், பாதியில் மீண்டும் வேகம் பிருந்து பாய்ந்து போனான்.

முத்துராமன் ஒருகணம் தாமதித்தான். இந்த நிமிடம் சண்டையில் கலந்து கொள்வதைக் காட்டிலும் நிறுத்தப் பார்ப்பதே உத்தமம் என்று தோன்றியது. சூழ்நிலையை உற்று நோக்கியபோது




இரண்டு சுமோக்களும் ஏராளமான கட்டைகளும் கண்ணில் பட்டன.

கண்டிப்பாக இது கலந்துகொள்ளக்கூடிய சண்டையாக இருக்க முடியாது. தகவல் சொல்ல ஓடி வந்தவன் சண்டை தொடங்கியதும் புறப்பட்டிருக்க வேண்டும். ஒரு சுமோ இரண்டான விஷயம் அவன் அறிந்திருக்க முடியாது.

"ஏ... நிறுத்துங்கப்பா... யாருப்பா அது?"

பொதுவில் குரல் கொடுத்தபடி சற்றே அருகே போகப் பார்த்தான். அந்நியர்களில் இருவர் திரும்பிப் பார்த்தார்கள்.

"முத்து... அடிச்சிட்டானுங்க முத்து..."

"த... சும்மாரு... நீ என்னா பண்ணன்னு யாருக்குத் தெரியும். அவங்க யாரு; எதுக்கு வந்தாங்கன்னு கேப்பாம். அலோ... கொஞ்சம் பொறுங்க... இங்க வாங்க... அலோ..."

"டேய், நீ யாருடா?"

கொத்தாக அவன் சட்டையைப் பிடித்து நெஞ்சோடு இழுத்தான் ஒருவன்.

"டேய்... கைய எடு மொதல்ல..."

**அடிச்சிக்கிட்டு சாக நான் தயாரில்ல. நீங்க யாரு. என்னா வோணும்னு சொல்லுங்க. அத்த வுட்டுட்டு வண்டில வந்து எறங்கி அடிக்க ஆரம்பிச்சா என்னா அர்த்தம்?**

**அந்தக் குரலின் உச்சத்தை அதுகாறும் அவர்கள் பார்த்ததில்லை. முத்துராமனா இது? தாக்க வந்தவர்கள் தணிந்து, தள்ளி நின்றார்கள்.**

முறைத்தான். ''எடுன்னு சொல்றன்ல?''

முத்துராமனின் பார்வையில் தெரிந்த தீயில் சற்றே தயங்கியவன், பிடியை இலேசாகத் தளர்த்தினான்.

''பேசிக்கிட்டுத்தானே இருக்காங்க? என்னாத்துக்கு மேல கைய வெக்கற?'' அவன் சற்றும் எதிர்பாராத விதத்தில் பொளேரென்று அறைந்தான் முத்துராமன்.

அதை யாரும் எதிர்பார்க்கவில்லை. சமாதானத்துக்கு வந்தவனை உத்தேசித்துத் தாற்காலிகமாகச் சண்டையை நிறுத்தியிருந்தவர்கள், இந்த எதிர்பாராதத் தாக்குதலில் சற்று நிலைகுலைந்தது போலப் பட்டது. முத்துராமன் அதைத்தான் எதிர்பார்த்தான்.

''தபார்... அடிச்சிக்கிட்டு சாக நான் தயாரில்ல. நீங்க யாரு, என்னா வோணும்னு சொல்லுங்க. இந்த வேலைய செஞ்சிக்கிட்டிருக்கறது நானு. வட்டச் செயலாளர் சிங்காரம் அண்ணன் சொல்லி நான் செய்யறேன். புரியுதா?




நிறுத்தணும்னா ஏன் நிறுத்தணும், யார் நிறுத்தச் சொன்னாங்கன்னு சொல்லு. சரியா இருந்திச்சின்னா நிறுத்தறேன். அத்த வுட்டுட்டு நேரா வண்டில வந்து எறங்கி அடிக்க ஆரம்பிச்சா என்னா அர்த்தம்? குப்பத்துல நூத்தி நுப்பது பேரு ஆம்பளைங்க இருக்காங்க. சேந்து வந்து அடிச்சா தாங்குவீங்களா? சொல்லுங்கடா!''

''த பாரு முத்து... உன்னிய எங்களுக்குத் தெரியும். நீ வீணா இந்த வெவகாரத்துல தலையிடாத. இது பெரிய எடத்து விசயம். நிறுத்துன்னு சொன்னா சர்தான்னு நிறுத்திட்டுப் போய்க்கினே இருக்கணும். உங்காளு என்னா பண்ணான் கேளு... புல்டோசர எடுத்துக்கினு வண்டி மேல மோத வந்தான். வந்தானா, இல்லியான்னு கேளு. நாங்க பாத்துக்கினு சும்மா இருப்பமா?''

முத்துராமன் கூட்டத்தைத் திரும்பிப் பார்த்தான். ''யாருடா அது?''

முணுமுணுவென்று பேச்சுச் சத்தம் எழுந்தது. ''யாருன்னு கேக்கறேன்ல?''

அமைதி. ''தூக்கிப்போட்டு மிதிச்சிருவேன் நாய்ங்களா... யாருன்றன்ல?''

அந்தக் குரலின் உச்சத்தை அதுகாறும் அவர்கள் பார்த்ததில்லை. முத்துராமனா இது? தாக்க வந்தவர்கள் தணிந்து, தள்ளி நின்றார்கள்.

இதுதான் சந்தர்ப்பம் என்று முத்துராமனுக்கு மிகத் தெளிவாகத் தோன்றியது.

(தொடரும்)



# அமரர் கல்கி நினைவுச்

## படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே!
## நீங்கள் அனைவரும்
## ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்
## சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

## முதல் பரிசு - ரூ.10,000/-
## இரண்டாம் பரிசு - ரூ.7,500/-
## மூன்றாம் பரிசு - ரூ.5000/-

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. **500** சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

**விதிமுறைகள்:**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்

கடந்த ஆண்டுகளில் முதல் பரிசு பெற்ற...

ஜெயமோகன்...


சுபா...

# சிறுகதைப் போட்டி 2007

தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2007'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி,**

**கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**

**ஈக்காடுதாங்கல், சென்னை -600 032**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.



படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**

# "தலைகனத்துல தடுமாறிட்டேன்!"

நடிகர் சரவணனை ஞாபகமிருக்கிறதா? ஒரு காலத்தில் இரண்டாவது விஜயகாந்த் என்று போற்றப்பட்டு, பின்பு காணாமல் போய, அப்புறம் 'நந்தா' படம் மூலம் திரும்ப வந்து திரும்பவும் காணாமல் போனவர். இப்போது 'பருத்தி வீரன்' மூலம் மனிதருக்கு மறுவாழ்வு.

"இதுவரைக்கும் இருபது படத்துக்கும் மேல ஹீரோவா நடிச்சிருந்தாலும், உண்மையிலேயே என்னுடைய முதல் படம்னா அது பருத்தி வீரன்தாங்க'' என்று உருகுகிறார் நடிகர் சரவணன்.

"இத்தனை நாளும் என்ன பண்ணிக்கிட்டிருந்தீங்கன்னு ஒரு கேள்வி எழும்பும். இதுக்கு ஒரே பதில் நான் தலைகனத்துல தடுமாறிட்டேன். அதுக்குத் தண்டனையா பல நேரங்களில் ஆட்டோவுல கர்ச்சிஃப்பை மூஞ்சில கட்டி மறைச்சுக்கிட்டு போயிருக்கேன். அந்த நேரத்துல எல்லாம் என் மனைவி சூர்யஸ்ரீயோட சப்போர்ட் இல்லன்னா, இன்னைக்கு நான் இல்ல..." கண் கலங்குகிறார்.

''உங்க முன்னால என்னைப் பேச வெச்சுருக்கிற அமீர் சாருக்கு நன்றிங்கற வார்த்தை ரொம்பச் சின்னது. மதுரையில ஷூட்டிங். 'யாரும் மாடர்னா ஸ்பாட்டுக்கு வராதீங்க. இங்க உள்ள மக்களைப் போல சாதாரணமா ட்ரெஸ் பண்ணிக்கிட்டு மக்களோட மக்களா பேசிப் பழகுங்க. அதுவரைக்கும் உங்களுக்கு எந்த சீனும் கிடையாது'ன்னு வெயிலில் அலையவிட்டாரு அமீர் சார். 'என்னடா இது ஒரு படத்துக்கு இவ்வளவு சிரமப் படணுமா?'ன்னு முணுமுணுத்திருக்கேன். ஆனா இன்னைக்கு ரஜினி சார் மிட்நைட்ல போன் பண்ணி 'நல்ல பதிவு. இதுவரைக்கும் பார்க்காத பார்வை'ன்னு பாராட்டுறாரு. இனி மதுரைப் பக்கம் போகணும்னா போலீஸ் பாதுகாப்போடதான் போக முடியும்ங்கிற அளவுக்கு ரசிகர்களின் அன்புத் தொல்லை" என்கிற சரவணன், "இன்னொரு விஷயம், அடுத்த படத்துல போலீஸ் கெட்டப்ல ஹீரோவா நடிக்கிறேன்" என்கிறார் சந்தோஷம் பொங்க.

- ம.மனோவிக்டர்

படம் : பொள்ளாச்சி சுந்தரம்





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

ரிசர்வ் லைன், புது நத்தம் சாலை, மதுரை - 625 014.
தொலைபேசி : 0452-2680224, 2681181 e-mail : rkmath@eth.net





விநாயகர் துணை

## பொதுமக்களுக்கு ஓர் அன்பார்ந்த வேண்டுகோள்!

அன்புடையீர், கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது.

மதுரையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் 1987-ஆம் ஆண்டு துவக்கப்பட்டது. எனினும் 1998-ஆம் ஆண்டுதான் இங்கு ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் கட்டப் பெற்றது. எனவே இந்த மடம் 9 வயது குழந்தையைப் போன்று இனி வளர வேண்டிய நிலையில் உள்ளது.

மதுரை, ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் பொது நூலகம், புத்தக விற்பனை நிலையம் ஆகியவற்றுக்கு ஒரு புதிய கட்டடம் கட்டும் பணி இப்போது நடந்து கொண்டிருக்கிறது.

**முதல் தளத்தில் Multipurpose Hall - பொது நூலகம், சொற்பொழிவு அரங்கம்:**

பொது நூலகம் - இலவச வாசகசாலை, ஆடிட்டோரியம் ஆகியவற்றுக்காக Multipurpose Hall ஒன்று கட்ட வேண்டிய நிலை உள்ளது. முதல் தளத்தில் 3423 சதுர அடியில் அமைய இருக்கும் இந்தப் பொது நூலகக் கட்டடம் (Multipurpose Hall) கட்டி முடிப்பதற்கு, ரூபாய் 22.8 இலட்சம் செலவாகும் என்று தெரிகிறது.



**தரைத்தளத்தில் புத்தக விற்பனை நிலையம், அலுவலகம், Visitors Room :**

புதிதாகக் கட்ட ஆரம்பித்திருக்கும் கட்டடத்தின் தரைத் தளத்தில் புத்தக விற்பனை நிலையம், அலுவலகம், Visitors Room ஆகியவற்றைக் கட்ட இருக்கிறோம். இவை அமைய இருக்கும் 3439 சதுர அடிகள் கொண்ட தரைத்தளக் கட்டடம் கட்டி முடிப்பதற்கு ரூபாய் 22.5 செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

**நன்கொடை :**

இந்தத் தரைத்தளக் கட்டடம் 3439 சதுர அடிகளும், முதல் மாடிக் கட்டடம் 3423 சதுர அடிகளும் சேர்ந்து இந்தப் புதிய கட்டடம் மொத்தம் 6862 சதுர அடிகள் கொண்டதாக இருக்கும். எனவே புதிய கட்டடத்தின் தரைத்தளம் கட்டுவதற்கு ரூபாய் 22.5 இலட்சம், புதிய கட்டடத்தின் முதல்தளம் கட்டுவதற்கு ரூபாய் 22.8 இலட்சம் ஆகிய இரண்டையும் சேர்த்து, இந்தப் புதிய கட்டடத்தைக் கட்டி முடிப்பதற்கு ரூபாய் 45.3 செலவாகும்.



இந்தப் புதிய கட்டடத்தைக் கட்டி முடிப்பதற்குத் தாராளமாக நன்கொடை வழங்கி உதவி செய்யும்படி, அன்புள்ளம் கொண்ட பொதுமக்கள் அனைவரையும் பெரிதும் அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இந்தப் புதிய கட்டடம் கட்டுவதற்கு ரூபாய் ஒரு இலட்சத்துக்கும், அதற்கும் அதிகமாகவும் நன்கொடை வழங்குபவர்களின் பெயர்கள், கட்ட ஆரம்பித்திருக்கும் புதிய கட்டடத்தில் முக்கிய இடத்தில் சலவைக் கல்லில் வைக்கப்படும். இந்தக் கட்டடம் கட்டுவதற்கு அளிக்கப்படும் சிறிய தொகையும் நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்கீழ் வருமான வரி விலக்கு உண்டு.** நன்கொடைகளை ***'ராமகிருஷ்ண மடம், மதுரை'*** என்ற பெயரில் காசோலை, டிமாண்ட் டிராஃப்ட் மூலம் அனுப்பி உதவுங்கள். இறைவன் தங்களுக்கு நீண்ட ஆயுளையும், ஆரோக்கியத்தையும் தந்தருள்வாராக.

இறைவன் தொண்டில் தங்களன்புள்ள,
**சுவாமி கமலாத்மானந்தர்**, தலைவர்

''உங்க தலைவர் யார் வழி நடக்கறார்...?''

''அவர் எங்கய்யா நடக்கறார்? குவாலிஸில்தானே போறார்...!''

- மன்னை எஸ். சுவாமிநாதன்





''நம்ம வீட்டுச் சுவர்க் கடிகாரம் விழுந்து நொறுங்கிப் போச்சு... நல்லவேளை ஒரு நிமிடம் முன்னாடி விழுந்திருந்தா என் அம்மா அடிபட்டிருப்பாங்க...''

''எப்பவும் இந்தக் கடிகாரம் ஸ்லோ தான் விமலா!''

- சியாமளா சுவாமிநாதன்

''டாக்டர்... நீங்க யாருகிட்டே சந்திக்கிற தோல்வியைப் பெருசா எடுத்துக்கறதில்ல...?''

''ஆபரேஷன் தியேட்டர்ல எமன்கிட்ட சந்திக்கிற தோல்விகளைத் தான்...''

- கே.ஜி.எஸ்.



''அந்த கிரிக்கெட் பிளேயர் ரொம்ப அமைதியானவர். வன்முறையைக் கொஞ்சம் கூட விரும்பாதவர்...''

''எப்படிச் சொல்றே?''

''வர்ற பந்தைக்கூட அடிக்க மாட்டார்னா பாரேன்!''

- கே.ஆனந்தன்



# தலை ஆடாதபோது வால் ஆடலாமா?



"எங்க சீரியலை நீங்க உயிருக்கு உயிரா விரும்ப என்ன காரணம்?"

"அது ஓடறப்போ என் மனைவி என்கிட்ட ஒரு வார்த்தைகூட பேச மாட்டாளே!"

- சே



"படையெடுத்து வந்த எதிரி நாட்டு மன்னன், உங்கள் அரியணையைக் கைப்பற்றி விட்டான் அரசே!"

"சந்தோஷம் அமைச்சரே. அதில் வெறும் மூட்டைப்பூச்சிகள்தான் அதிகம்!"

- அம்பை தேவா








"ஏம்பா, முன்னணி பேட்ஸ்மேன்கள் சரியா விளையாடாத நேரத்துல பின்வரிசை வீரர்களான நீங்களாவது கொஞ்சம் நல்லா விளையாடி மானத்தைக் காப்பாத்தி இருக்கக் கூடாதா...?"

"தலையே ஆடாதபோது வால் ஆடக் கூடாது சார்!"

- ஏ.எஸ்.யோகானந்தம்

பத்தரைப் பங்காளித் தலைவன்மார்னு பத்துப் பேர் அந்தக் காலத்துல கோபாலசமுத்திரத்துல வாழ்ந்துக்கிட்டு இருந்தாங்க. ஊர்க்காவல், காணிக்காவல், நீர்க்காவல், கோயில்காவல்னு சகலவிதமான காவல்களையும் அந்தச் சுற்று வட்டாரத்துல பத்தரைப் பங்காளித் தலைவன்மார்கள்தான் செஞ்சுக்கிட்டு இருந்தாங்க.

சுற்று வட்டாரத்துக் காவலுக்குக் கூலியாக வரும் தானியங்களையும், மீன் வகையறாக்களையும், காசுகளையும் இவர்கள் மொத்தமாகச் சேர்த்து 'பத்தரை' பங்கு

# தலையாரியின் தகிடுதத்தம்!

வைப்பார்கள். பத்துப் பேருக்கும் பத்துப் பங்கு போக, மீதி அரைப்பங்கு அவர்களில் தலைவனாகச் செயல்படுகிறவனுக்கு என்று கொடுத்து விடுவார்கள். பங்கு பிரிக்கிற பொறுப்பு அந்தத் தலைவனோடதுதான். அதன் பேர் 'சேட்டைப் பங்கு.'

இப்படித் தலைவனாக இருக்கிறவர், பரம்பரை பரம்பரையாக இருப்பார். அவர்களுக்கு மட்டும் ஒண்ணரைப் பங்கு பாகம் கிடைக்கும்.

கோபாலசமுத்திரத்துல சுப்பிரமணியம்தான் அந்தக் காலத்துல ஒண்ணரைப் பங்குத் தலைவராக இருந்தார். அவர் பொண்டாட்டி பேரு சுந்தர வடிவு. அவங்களுக்குப் பொறந்த புள்ள பேரு சிவராமன்.

சிவராமன் வளர்ந்து வாலிபமாகி, தலைவராவும் ஆனான். சிவராமன் வம்புதும்புகளுக்குப் போகாதவன். நீதி, தவறாம நியாப்படி காவல் கடமைகளைச் செஞ்சான்.

பத்தரைப் பங்காளிகளில் மாலகண்டர்னு ஒருத்தர் இருந்தார். ஊர் தலையாரி. அவர் ரொம்பப் பொல்லாத ஆள்.

அந்த ஊர்ல கிராம்சு (கிராம முன்சீப்) சொக்கலிங்கம் பிள்ளை. இவர் தலையாரி. மாலகண்டரோடு போய் வரி வசூல் பண்ணுகிறது வழக்கம்.

ஒரு வாரம், வசூலாகும் வரிப் பணத்தைச் சேர்த்து வச்சிருந்து மொத்தமாக அம்பாசமுத்திரம் கஜானாவில் கொண்டு போய்க் கட்டுவார் கிராம்சு, சொக்கலிங்கம் பிள்ளை.

அப்படி வசூல்களை செய்ஞ்ச தொகையை ஒரு நாள் தலையாரி மாலகண்டரிடம் கொடுத்து, "இந்தப் பணத்தை எண்ணிச் சரிபார்த்து நடு வீட்டு அலமாரியில் வைச்சுப் பூட்டிச் சாவி



யைக்கொண்டு வா"ன்னார்.

மாலகண்டத் தேவர், ரூபாய் நோட்டுகளையும், நாணயத்தையும் எண்ணி, "ஐயா, பணம் சரியா இருக்கு"ன்னு சொல்லி சொக்கலிங்கம் பிள்ளையின் நடுவீட்டு அலமாரியின் நடுத்தட்டில் ஒரு துணிப்பையில் போட்டு வச்சார். ஆனால், அலமாரியை அடைத்துப் பூட்டாம அலமாரியின் சாவியை எடுத்து வந்து கிராம்சு சொக்கலிங்கம் பிள்ளை

யிடம் கொடுத்துட்டார்.

அன்னைக்கி பத்தமடையில் துளசி தாசங்கிற நாடகம். சொக்கலிங்கமும் மாலகண்டரும் வண்டி கட்டிக்கிட்டுப் புறப்பட்டாங்க.

அப்போ தலையாரி நடிப்புடன், "எனக்கு வயிறு சரியா இல்லை. 'கட முட'ன்னு சத்தம் போடுது. அத்தோட வண்டியையும், மாடுகளையும் இப்படி ராத்திரி நேரத்துல தனியா போட்டுட்டுப் போக முடியாது. அதனால, நான் இங்கனயே வண்டிக்கும் மாடுகளுக்கும் காவலாப் படுத்துக்கிடுதேன். நீங்க போய் நாடகம் பார்த்துட்டு வாங்க"ன்னார்.

இருந்த ஓட்டைப் பிரிச்சி நடு வீட்டுக்குள்ள இறங்கிப் பூட்டாமப் போட்டிருந்த அலமாரியைத் திறந்து, அதுக்குள்ள இருந்த பணப்பையை எடுத்துக்கிட்டு, வந்த சொவடு தெரியாம, வெளியே வந்தாரு. ஊருக்கு ஒதுக்குப் புறமான ஒரு இடத்துக்கு வந்து, பணப்பையை ஒரு மரத்



14

# ஜனங்களின் சாமி



## கழனியூரன்

தலையாரி சொல்றதுலயும் நியாயம் இருக்குன்னு நினைச்ச சொக்கலிங்கம் புறப்பட்டார்.

வெளியில தலையாரி மாடுகளை ஒரு மரத்தடியில கட்டிட்டு, அதுகளுக்குத் தீவனத்துக்குக் கொஞ்சம் வைக்கோலையும் அள்ளிப் போட்டுட்டு நேரே, விறு விறுன்னு சொக்கலிங்கம் வீட்டைப் பார்த்து நடையைக் கட்டினார்.

வீட்டுக்குப் போயி, வீட்டுக் கூரையில

தடியில புதைச்சிட்டு, நேரே 'விறு விறு'ன்னு திடலுக்கு வந்து, மாடுகளுக்குக் கொள்ளும், வைக்கோலையும் அள்ளிப் போட்டுட்டு வில்வண்டியிலேயே படுத்துட்டார், தலையாரி.

நாடகம் முடிஞ்சி வந்த சொக்கலிங்கம், "தலையாரி, தலையாரி"ன்னு எழுப்பினாரு. தலையாரி உறக்கம் கலைஞ்சி

எழுந்து, ரெண்டு பேருமா வண்டில வீட்டுக்குப் புறப்பட்டாங்க.

காலையில சொக்கலிங்கம் அம்பா சமுத்திரம் கஜானாவில் கொண்டு போய் வரி வசூலான பணத்தைக் கட்ட அலமாரி பக்கம் போனா, அது திறந்து கிடக்கு.

அலமாரிக்குள்ள பணப்பை இருக்கான்னு பார்த்தார் கிராம்சு. கைப்பையைக் காணலை. உடனே ஆள் அனுப்பி தலையாரியைக் கூப்பிட்டு வரச் சொன்னார். தலையாரி வந்ததும் "என்னவே, நேத்து வரி வசூலான பணத்தை எல்லாம் உம்கிட்ட கொடுத்துத்தானே அலமாரியில வைக்கச் சொன்னேன். இப்ப பணத்தைக் காணமே"ன்னார்.

சொக்கலிங்கம் வீட்டுக்குப் போயி ஓட்டைப் பிரிச்சி உள்ளே இறங்கி, அலமாரியைத் திறந்து பணப்பையை எடுத்தான்.



தலையாரி, "ஐயா, நீங்க சொன்னமாதிரி, சொன்ன இடத்துல அலமாரியிலதான் பணப்பையை வச்சேன். பணம் எப்படிக் காணாமப் போச்சோ? எனக்குத் தெரியாது"ன்னு கையை விரிச்சுட்டார்.

கிராம்சு சொக்கலிங்கம் பிள்ளை நேரே பத்தரைப் பங்குத் தலைவன்மார்களின் தலைமைப் பொறுப்பில் இருக்கிற சிவராமர்கிட்ட போய் வழக்கைச் சொன்னார். சிவராமருக்குச் சின்ன வயசு. தலையாரிக்கோ அம்பது வயசுக்கு மேல இருக்கும். என்றாலும் தலையாரியைக் கூப்பிட்டு 'என்ன நடந்தது?'ன்னு விசாரிச்சார். தலையாரி முன்னுக்குப் பின் முரணா பதில் சொன்னார். அதனால சிவராமன் "இன்னையில் இருந்து உம்மைப் பத்தரைப்பங்கிலிருந்து விலக்கி வைக்கிறோம்"ன்னு தீர்ப்புச் சொன்னாரு.

அதனால தலையாரி சிவராமன் மேல் கோவமாக இருந்தார். இதற்கிடையில் மாடு மேய்க்கிற பிள்ளைகள், மரத்தடியில் கிள்ளி விளையாடு கையில் பணப்பை கிடச்சதுன்னு சொல்லி சிவராமனிடம் கொண்டாந்து கொடுக்க, அவர், கிராம்சு சொக்கலிங்கம் பிள்ளையிடம் ஒப்படைத்தார்.

'எப்படியோ கை விட்டுப்போன முதல் கிடைத்ததே'ன்னு சந்தோசப்பட்டார் கிராம்சு பிள்ளை.

தப்பு செஞ்ச ஒருத்தர பத்தரைப் பங்கு சேர்ந்து துணிச்சலா நீக்கின கதையைச் சொல்லி முடித்தார் தாயார் தோப்பு ஊரைச் சேர்ந்த ருத்திரமணி என்ற தகவலாளர்.

திருநெல்வேலி, அம்பாசமுத்திரம் வட்டத்திலிருக்கிறது கோபாலசமுத்திரம். இங்கு நீதியை நிலைநாட்டிய சிவராமருக்கு கோயில் உள்ளது. தென்னகத்திலேயே இந்தச் சாமிக்கு மட்டும் மீன் படையில் இடப்படுகிறது. தென்காசிக்கு அருகில் மத்தளம்பாறை என்ற ஊரிலும் சிவராம தேவருக்கு பிடிமண் கோயில் உள்ளது. ●

இப்பொழுது சந்தியாவைப் பார்த்தாலும் 'வல்லவன்' ஞாபகத்துக்கு வருகிறது. 'காதல்', 'டிஷ்யூம்'க்குப் பிறகு மூன்று நாயகிகளில் ஒருவராக வலு இல்லாத ஒரு கதாபாத்திரத்தில் நடித்திருக்கத்தான் வேண்டுமா?

"சிம்பு கதை சொல்லும்போது நான்தான் மெயின் ஹீரோயின். அந்த ஒரு காரணத்தால் கதையில் மூன்று நாயகிகள் இருந்தும் ஒப்புக்கொண்டேன். ஆனால், இறுதியில் என் காட்சிகள் மீது நிறையக் கத்திரி. சிம்பு எனக்குச் சொன்ன காட்சிகள், நான் நடித்த காட்சிகள் எல்லாம் முழுமையாகப் படத்தில் வரவில்லை. ஒப்புக்கொண்ட படத்தை ஒழுங்காக முடித்துத் தர வேண்டும் என்று எவ்வளவு

# "செல்வராகவன் படத்தில் அப்படியெல்லாம் இருக்காது!"

நாளானாலும் ஒழுங்காக நடித்துக் கொடுத்தேன். 'வல்லவனி'ல் என் ரோலில் யாருக்காவது குறைபாடு இருந்தால் சிம்புவிடம்தான் மேற்கொண்டு விளக்கம் கேட்க வேண்டும். இந்த அனுபவங்கள் எல்லாம் சினிமாவில் சகஜம். படம் வெற்றியடைந்ததுதான் எல்லாவற்றையும்விட முக்கியம்" என்று அடுத்து நடிக்கும் முக்கிய படமான செல்வராகவனின் 'மாலை நேரத்து மயக்கம்' பற்றிப் பேச ஆரம்பிக்கிறார்.

"கார்த்தியுடன் போட்டோ ஷூட் மட்டும்தான் நடந்து முடிந்திருக்கிறது. செல்வராகவன் இயக்குநர் என்ப

தால் கதை கேட்கவில்லை. நான் அவருடைய பெரிய ஃபேன். ஒன்பதாவது படிக்கும்போது 'காதல் கொண்டேன்' பார்த்தேன். அப்பொழுதே அவர் படங்கள் மீது ஒரு வித மயக்கம் ஏற்பட்டுவிட்டது. அவர் படங்களில் கதாநாயகிகளுக்கு நெருக்கமான காதல் காட்சிகள் இருந்திருக்கலாம். எனக்கு அப்படியெல்லாம் இருக்காது என்று நினைக்கிறேன். செல்வராகவனும் என்னைத் தேர்ந்தெடுக்கும் போது நூறுமுறை யோசித்துத்தானே முடிவெடுத்திருப்பார்'' என்கிறார் சந்தியா பனிச்சென்று.

பாடுகிறேன் பேர்வழி என்று நடிகர்கள் பாட்டுப் படிப்பார்கள். ஆனால், சந்தியாவுக்குக் குயில் குரல். 'மஞ்சள் வெயில்' படத்தில் பரத்வாஜ் இசையில் ஒரு பாடல் பாடவிருக்கிறாராம். 'மொழி' படத்தில் வருகிற 'காற்றின் மொழி' பாடல் மீது இவருக்குக் கொள்ளை ஆசை. சினிமாவில் பாவனா, சந்தியாவுக்கு நெருங்கிய தோழி.

''சிரித்த முகம் எனக்கு. ஆனால் கேமரா ஓடும்போது சிரிப்பு தொண்டைக்குள் சென்று ஒளிந்துவிடும். ஆனால், பாவனா தூக்கத்தில்கூட சிரிப்பார். பேசும்போது சிரிப்பார். நடக்கும்போது சிரிப்பார். அறிமுகமாகிற அடுத்த நிமிடமே யாராக இருந்தாலும் சிரிக்கச் சிரிக்கப் பேசுவார். புது மனிதர்கள் என்றால், நான் பூனை மாதிரி ஓடி ஒளிவேன். ஆனால், இருவரும் பேசத் தொடங்கினால் அவ்வளவுதான்... இரண்டு எஃப்.எம்.கள்




ஒரே நேரத்தில் ஒலிபரப்பாவது போல இருக்கும்.''

சினிமாவில் சந்தியாவுக்குப் பிடிக்காத விஷயம் கால்ஷீட் பிரச்னை. ''தேதிகள் பிரச்னையால் மட்டும்தான் நல்ல படங்களை அவ்வப்போது இழந்து கொண்டிருப்போம். 'அறிந்தும் அறியாமலும்' படத்தில் சமிக்ஷா நடித்த கதாபாத்திரம் முதலில் எனக்கு வந்த வாய்ப்புதான். 'காதல்'க்குப் பிறகு கிடைத்த நல்ல கேரக்டர். எனக்குச் சொன்னபோது அந்தக் கதாபாத்திரத்தில் அவ்வளவு கிளாமர் கிடையாது. நடிக்க ஆசை ஆசையாக இருந்தது. ஆனால், தேதிகள் கைகொடுக்கவில்லையே'' என்கிறவர், அழுத்தமாக நம்புவது அதிர்ஷ்டத்தை.

''தினம் தினம் புதுப் புது வாசல் வழியாக ஏராளமான நடிகைகள் தமிழ் சினிமாவுக்குள் நுழைகிறார்கள். அவர்களுக்கெல்லாம் திறமையோடு சேர்த்து நிறைய லக்கும் வேண்டியிருக்கிறது. எனக்கு ஒரு பாலாஜி சக்திவேல் கிடைத்த மாதிரியான நல்லதொரு அதிர்ஷ்டம்.''

**- ச.ந.கண்ணன்**

**"புது மனிதர்கள் என்றால் நான் பூனை மாதிரி ஓடி ஒளிவேன். ஆனால் அவள் அப்படி அல்ல!"**

**கா**ல்சென்டர் பெண்கள் பாவம் என்றால் பலரும் அடிக்கவே வந்துவிடுவார்கள். 'பைநிறையச் சம்பாதிக்கிறார்கள். எதற்காக பாவப்பட வேண்டும்?' என்கிற குரல் எழும். ஆனால் அவர்கள், சந்திக்கக்கூடிய சிக்கலைப் புரிந்து கொண்டால் 'கல்' மனமும் கரைந்து விடும்.

"இப்போதெல்லாம் பலருக்கும் சிறுநீரகங்களில் கற்கள் உருவாகின்றன. அதுவும் கால்சென்டர் பெண்களுக்கு இப்படி நேர வாய்ப்பு அதிகம்'' என்கிறார் சென்னை, தாமஸ் மவுண்ட் மருத்துவமனையின் சிறுநீரக நிபுணர் டாக்டர் ரவிச்சந்திரன்.

"மனித ரத்தம் அடிப்படையில் காரத் தன்மை (alkaline) வாய்ந்தது. ரத்தத்தின் pH அளவு (காரத் தன்மை) 7.4. இந்த எண்ணிக்கை ஏழு அல்லது அதற்குக் கீழ் குறையும் போது அமிலத்தன்மை வந்து விடும்.

உடலில் சேரும் அமிலம் சிறுநீரகத்தின் வழியாகத்தான் வெளியேற வேண்டும் pH 6 வரை குறைந்தால் சிறுநீரகப் பாதையில் எரிச்சல் உண்டாகும்.

பசுமையான காய்கறிகளும் புதிதாகத் தயாரிக்கப்பட்ட உணவுகளும் காரத் தன்மை வாய்ந்தவையாக இருக்கும். இது உடலில் அமிலத்தின் அடர்த்தியைக் கட்டுப்படுத்தும். இப்போதெல்லாம் பதப்படுத்திய உணவுகளையும், வறுக்கப்பட்ட மற்றும் துரித உணவு வகைகளையும் அதிகமாக உட்கொள்கிறார்கள். இவற்றில் அமிலத்தின் அளவு அதிகமாக இருக்கும்.

'ஸ்ட்ரெஸ்' எனப்படும் மன இறுக்கத்தின் காரணமாகவும் அமிலத்தின் அளவு உடலில் அதிகரிக்கும். பலமணி நேரம் அலுவலகத்திலேயே வேலைப் பளுவைச் சந்திக்கும் கால்சென்டர் பெண்களுக்கு மன இறுக்கம் தோன்ற வாய்ப்பு அதிகம்.

சுத்தமான காற்றில் காரத் தன்மையின் அளவு அதிகமாக இருக்கும். ஆனால் மணிக்கணக்கில் அலுவலங்களில் இயங்கும் ஏசி வழியாக நமக்குக் கிடைக்கும்

# சிறுநீரகப்



# பிரச்னையால் அவதியுறும் கால்சென்டர் பெண்கள்!

## - தீர்வு என்ன?

காற்றில் இது மிகக் குறைவு. மேலும் ஏசியிலேயே அதிக நேரம் இருக்கும்போது தாகம் எடுப்பதில்லை. எனவே, தண்ணீர் குடிப்பது குறைந்து விடுகிறது. தவிர, அமிலம் வெளியேறும் வாய்ப்பு சிறுநீரை அடக்கிக் கொள்வதன் காரணமாகவும், வியர்வை வெளியேறாமல் இருப்பதாலும் மேலும் குறைகிறது. கால்சென்டர் பெண்கள் பாதிக்கப்படுவது இப்படித்தான்.



• டாக்டர் ரவிச்சந்திரன்

பலரும் தூள் உப்பையும் (Table Salt) கல் உப்பையும் ஒன்றாகக் கருதுகிறார்கள். இது தவறு. கல் உப்பில் முப்பது சதவிகிதம் சோடியம் சத்து உண்டு. மீதி எழுபது சதவிகிதத்தில் உள்ள கால்ஷியம், மக்னீஷியம் சத்துக்களைப் பிரித்து உரமாக விற்று விடுகிறார்கள். மீதம்தான் தூள் உப்பாக நம் கைக்கு வந்து சேர்கிறது.

சோடியத்தால் நம் உடலில் அமிலச் சத்து அதிகமாகிறது. இதைச் சரி செய்ய மக்னீஷியம் மற்றும் கால்ஷியம் தேவை. ஆனால் தூள் உப்பில் இவை இல்லை. உடல் எலும்புகளில் இவை உண்டு. எனவே அங்குள்ள - முக்கியமாக கழுத்து, இடுப்பு போன்ற எலும்புகள் சேரும் இடத்தில் உள்ள கால்ஷியம், மக்னீஷியம் சத்தை உடல் உறிஞ்ச உறிஞ்ச எலும்பு கரையத் தொடங்குகிறது. இதைத்தான் 'ஆஸ்டியோபோராசிஸ்' என்கிறோம். இதைத் தொடர்ந்து க்ளைகேட்ஸ் (Glycates) ஏற்படுகிறது. சிறுநீரகங்களில் மணல் போல் இவை தோன்றும். இவை நாளடைவில் கற்களாக மாறுகின்றன.

சிறுநீரகத்தில் கற்கள் உருவாகத் தொடங்கும் போது சிறுநீர் அடர்த்தியான மஞ்சள் நிறத்தில் வெளியாகும். மேலும் சிறுநீர் கழிக்கையில் கடும் எரிச்சல் உண்டாகும்.

இவற்றையெல்லாம் தவிர்க்க, குறைந்தது ஒரு நாளைக்கு மூன்று லிட்டர் திரவம் நம் உடலில் சேர வேண்டும். தண்ணீர் இரண்டு லிட்டரும் பிற உணவுப் பொருட்கள் மூலம் ஒரு லிட்டரும் சேர வேண்டும். உணவில் உப்பைக் குறைவாகச் சேர்க்க வேண்டும். எண்ணெய்க்கு 'நோ' சொல்ல வேண்டும். சிட்ரிக் அமிலம், லாக்டிக் அமிலம் இந்நிலையில் தேவைப்படும். எலுமிச்சை, ஆரஞ்சு, தயிர் போன்றவற்றில் இவ்வமிலங்கள் உள்ளன.

சிறுநீரகச் சிக்கல்கள் நம் வாழ்க்கை ஆனந்தத்தையே பறித்துவிடலாம். முன் னெச்சரிக்கை நடவடிக்கைகளும், நிறையத் தண்ணீர் குடிப்பதும் புத்திசாலித்தனம்'' என்கிறார் டாக்டர் ரவிச்சந்திரன்.

**- ஜி.எஸ்.எஸ்.**

● ? ஆர்.நாகராஜன், சென்னை - 117

தமிழக அரசியலில் தனிநபர் தாக்குதல் அதிகரித்துவிட்டதே?

! தனிமனிதப் போற்றுதல் துவங்கிய போதே தனிமனிதத் தாக்குதலும் தொடங்கி விட்டது. முன்னது அதிகரிக்க, அடுத்ததும் கூடுதலாகிறது.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? பீஹார் வளர்ச்சியடையாததற்கு மத்திய அரசின் மாற்றாந்தாய் மனப் பான்மையே காரணம் என்று லாலு குற்றஞ்சாட்டியுள்ளாரே?

! இந்தக் குற்றச்சாட்டு உண்மை என்றே வைத்துக்கொள்வதானாலும் அதையும் மீறி உயர்ந்து, உன்னத நிலைகளை அடைந்தவர்கள் சரித்திரம் நிறைய உண்டே!

● டி.முருகேசன், திருவாரூர்

? சத்துணவில் வாழைப்பழம் கொடுத்தால் விவசாயிகள் பயன் பெறுவார்கள் என இல.கணேசன் யோசனை தெரிவித்திருக்கிறாரே?

! சாப்பிடும் மாணவர்களும் பயன் பெறுவார்களே! அதிக அளவில் முட்டை, அதன் உற்பத்தியாளர்களுக்கும் அரசியல் வாதிக்கும் நல்லதாக இருக்கலாம்; மாணவர்களுக்கு அவ்வளவு நல்லதல்ல.

● பி.சிவா, பாளையங்கோட்டை

? தமிழக பட்ஜெட் காகிதப்பூ என்கிறாரே விஜயகாந்த்?

! அழகான உவமை! அவர் ஆட்சிக்கு வந்து பிளாஸ்டிக் பூவாக மாற்றாமலிருந்தால் சரி.

● கே. கணபதி, சென்னை -11 ❐

? ஒரு பக்கம் விவசாய நிலங்கள் குறைந்து வருவதும் மறுபக்கம் மக்கள் தொகை பெருகி வருவதுமாக இருக்கும் நிலையில், நாம் எதிர்காலத்தில் எவ்வாறு உணவில் தன்னிறைவு அடைய முடியும்?

! தரிசு நிலங்களை விவசாய நிலங்களாக மாற்றுவது ஒரு பக்கம்; மக்கள் தொகை அதிகரிப்பதைக் கட்டுப்படுத்துவது மறுபக்கம்; குறைந்த நிலப் பரப்பில் நீர் நிர்வாகம் செய்து, அதிக விளைச்சல் காண்பது மூன்றாவது பக்கம் - என்று ஒரு சேர எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வதன் மூலம்தான்.

● ஜி.ஜி. சரவணன், மயிலாடுதுறை

? 'எனக்கும் சன் டீ.வி.க்கும் எந்தத் தொடர்பும் இல்லை' என்கிறாரே கருணாநிதி...?

! 'சூரியனுக்கும் அது வெளிப்படுத்தும் உஷ்ணத்துக்கும் எந்த சம்பந்தமும் இல்லை' என்பது போல்தான்!

● எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்

? பாராளுமன்றத்தின் நேரத்தை வீணடிக்கும் எம்.பி.க்களுக்கு அபராதம் விதிக்கும் சட்டம் கொண்டுவர ஆதரவு தெரிவித்துள்ள துணை ஜனாதிபதியின் கருத்தை வரவேற்கிறீர்களா?



❐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

கே. கணபதி,
ப.எண்:22, பு.எண்: 23,
செய்யாறு பார்த்தசாரதி தெரு,
சென்னை - 11

* ரூ.50/- பரிசு பெறுபவர்:

ஆர்.வஸந்தா,
7/13, ஃபிளாட் எண் 3, ஜெத் நகர்
மூன்றாவது கிராஸ், மந்தைவெளி,
சென்னை - 600 028

! நான் வரவேற்று என்ன புண்ணியம்? அத்தகைய சட்டத்தைக் கொண்டுவர எம்.பிக்கள் அல்லவா முன்வர வேண்டும்? அப்படியெல்லாம் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக்கொள்ள அவங்க தயாரா இருந்தா, நேரத்தை வீணடிக்கவே மாட்டாங்களே.

• முட்டை Vs வாழைப்பழம்!



• கரிசனம் Vs அரசியல்!



# நீங்கள் கேட்டவை-தராசு



• காகிதப்பூ Vs பிளாஸ்டிக்பூ!

● ஆர். தேக்கமலை, திருச்சி

? நொய்டாவில் நடந்த குழந்தைகள் படுகொலைகள் பிரச்னை அப்படியே கிடப்பில் போடப்பட்டுவிட்டதே?

! அப்படிக் கருத முடியாது. ஆய்வுகள் நடந்து வழக்கு பதிவாகியுள்ளது. நீதிமன்ற விசாரணை விரைவாக நடந்து, தீர்ப்பு வெளியாக, புதிதாக அமையவுள்ள உ.பி. அரசு நடவடிக்கை எடுத்துப் பாராட்டு பெறட்டும்.

● ஆர்.ராமசுப்ரமணியன், வடவள்ளி

? காங்கிரஸ் பேரியக்கத்தில் ஜனநா



• குற்றச்சாட்டு Vs வரலாறு!

யகம் தழைத்தோங்கிக் கொண்டிருப்பதனால் தான் அவர்களுக்கிடையேயான சிறு சிறு சலசலப்புகள்கூட வெளியே தெரிகின்றன என்கிறாரே ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்?

! தப்பு, தப்பு, தப்பு! உட்கட்சி ஜனநாயகமே இன்றி, 'தலைமை'யின் 'எடுத்தேன் கவிழ்த்தேன்' அணுகுமுறையில் குட்டித் தலைவர்கள் நியமனமாவதால் விளையும் கேடு இது. ஒழுங்காக உட்கட்சித் தேர்தல் நடத்தி, தலைவரைத் தேர்ந்தெடுத்துப் பார்க்கட்டும்... அப்புறம் திராவிடக் கட்சிகள் காங்கிரஸைக் கண்டு பயப்படும்.

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

? விடுதலைப் புலிகளுக்குத் தமிழ் நாட்டில் ஆதரவு இல்லை என்கிற நிலைப்பாட்டை, தமிழக அரசு உறுதியுடன் கடைப்பிடிக்கவேண்டும் என்று சட்டமன்றத்தில் காங்கிரஸ் எம்.எல்.ஏ. ஞானசேகரன் கூறியது...?

! அது ஞானசேகரனின் ஞானோபதேசம். ஆனால், தமிழ் நாட்டில் காங்கிரஸ் அல்லாத இதர தலைவர்களிடம் புலிகள் குறித்து நிலவுவது அஞ்ஞானமே!



• சப்பைக்கட்டு Vs நடைமுறை!

● எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

? பைப்பில் கேஸ் வீட்டுக்கு வீடு வருவது பற்றி...?

! ஒழுங்கா வருதுன்னா வரட்டும்; இப்ப தண்ணீர் வர மாதிரி வரும்னா வேண்டவே வேண்டாம்!

● ஆர்.வஸந்தா, சென்னை - 28 ●

? மதுரை மத்திய சிறையில் முதன் முதலாக கைதிகளுக்கு கேம்பஸ் இன்டர்வியூ நடத்தி, அவர்களது விடுதலைக்குப்பின் வேலை கிடைப்பதற்கான ஏற்பாடுகளை, சிறை அதிகாரிகளே செய்திருப்பது மிகவும் பாராட்டப்படவேண்டிய விஷயம் அல்லவா?

! பாராட்டுவதுடன் நில்லாமல் இந்தியாவில் உள்ள எல்லாச் சிறைச் சாலைகளும் பின்பற்ற வேண்டிய முன்னுதாரணம்.

● ஏ.மோகன்சுவாமி, கொளத்தூர்

? "தினேஷ் கார்த்திக் இந்திய அணிக்கு கேப்டன் ஆகத் தகுதியானவர்" என்று கிரெக் சாபல் கூறியுள்ளாரே?

! இப்படியெல்லாம் அவர் பேசிக்கிட்டிருந்தா, இந்திய அணிக்குக் கோச்சாக விளங்கத் தகுதியானவர் யார்னு தேட ஆரம்பிச்சுடுவாங்க. அதுதான் நம் நாட்டில் கிரிக்கெட் ஸ்டைல்!

● ஜி.ஜெயராமன், கூத்தலூர்

? "ஊனமுற்றவர்கள் என்று சொல்வதைவிட, தனித்திறன் கொண்டவர்கள் என்று கூறுவதுதான் சிறப்பாக இருக்கும்" என்று கனிமொழி பேசியுள்ளாரே?

! கனிவான மொழி. ஆங்கிலத்தில் இச் சொல் ஏற்கெனவே புழக்கத்தில் இருக்கிறது.

**வாசக தராசுகளே!**
**வாக்களியுங்கள்!**

இந்த வாரம் தராசு பதில்களுள் மிகச் சிறந்தது எது...? பதிலின் எண்ணை ஓர் அஞ்சல் அட்டையில் எழுதி **20.4.07க்கு** முன் கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடு தாங்கல், சென்னை - 97 என்ற முகவரிக்கு அனுப்புங்கள். முகவரி பகுதியில் **வாசக தராசு - 15.4.07** இதழ் என்று குறிப்பிட வேண்டும். எந்தப் பதிலுக்கு அதிக வாக்குகள் விழுகின்றனவோ, அதனைத் தேர்வு செய்த வாசகர்களுள் **யாரேனும் ஒருவருக்கு** குலுக்கல் முறையில் பரிசு ரூபாய் 100! வழக்கத்தைவிட கவனமாகப் பதில்களைப் படிச்சு எழுதுங்க, பார்க்கலாம்!

# வளம் தரும் கோயில்

சீதா ரவி

*'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்*
*தீரா நோய் தீர்த்தருள வல்லான்'*

என்று நாவுக்கரசர் வைத்தீஸ்வரன் கோயில் ஈசனைப் பாடுகிறார்.

மருந்தாக இருந்து நமது நோய்களைத் தீர்க்கிற அந்த வைத்தியநாத ஸ்வாமி, மயிலாடுதுறையில் உள்ள புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீஸ்வரன் கோயிலில் மட்டுமின்றி, சென்னைக்கருகே உள்ள பூவிருந்தவல்லி என்னும் பூந்தமல்லியிலும் அருள் பாலிக்கிறார்.

'இது என்ன... மந்திரமா தந்திரமா? ஒரே வைத்திய ஈசன் எப்படி இரு இடங்களில்...?' என்று நாம் கேட்கலாகாது! அதே வைத்தியநாத ஸ்வாமி, அதே தையல் நாயகி, அதே செல்வ முத்துக்குமார சுவாமி, அதே அங்காரகன் (செவ்வாய்) என்று மயிலாடுதுறை வைத்தீஸ்வரன் கோயிலின் அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டருக்கு இங்கே ஆஜர் சொல்கின்றனர் கடவுளர்!

ஒரு நடை பூந்தமல்லியில் உள்ள இந்த வைத்தீஸ்வரனை தரிசித்துவிட்டு வந்தால், 'இது மந்திரமோ, தந்திரமோ அல்ல... ஈசனின் மகிமையே' என்பதை உறுதியாக உணர்வோம்.

சென்னையிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் சாலையில், பூந்தமல்லி பேருந்து நிலையத்துக்கு முன்பாகவே இடப்புறம் உள்ள கிளைச் சாலை (சந்து?)க்குள் நுழைந்தால் வடக்கு நோக்கிய ராஜ கோபுரம் நம்மை வரவேற்கிறது.

நாம் செல்கிற தினம் சனி பிரதோஷம். வீதியை அடைத்து வாகனங்கள்; கோயில் பிராகாரத்தை அடைத்து நிற்கும் மக்கள் வெள்ளம்! நந்திகேசுவரர் முன் நெய் விளக்கு



ஏற்றும் கன்னிப் பெண்கள் கூட்டம். தேவனூர் வேங்கடேச ஓதுவார் காத்திரமாக திருமுறை பாடிக் கொண்டிருக்கிறார். திருச்சுற்றை வலம் வரவே கியூ தான்; பிரசாதத்துக்கு இன்னொரு கியூ. பக்தி பெருக்கில் தரிசனம் முடித்து, பிரசாதத்தை வாங்கித் தின்று விட்டு, அந்தப் பக்திக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிற மாதிரி காலித் தொன்னைகளை வாரி இறைத்திருக்கிறார்கள்! வருத்தமாக இருக்கிறது - 'பக்திக்குத் தொன்னையா ஆதாரம்?' என்று புதுமொழி படைக்கலாம் போலிருக்கிறது! வெளியே மங்கல தீர்த்தம் என்ற அழகான திருக்குளம் இருக்கிறது - கிழக்குக் கோபுர வாசலில். அங்கேயும் கொள்ள மாளாத... வெள்ளமல்ல, பிளாஸ்டிக் குப்பைகள்! இப்படிக் குப்பை போடும் நோயிலிருந்து இந்த தேசத்தை உத்தாரணம் செய்யேன் வைத்தியநாதா!"

## புதிய தொடர்

## 1

கன்றுகள் நிற்பதும் ஆறுதல் தருகின்றன. பிராகாரச் சுவரையொட்டி ஒற்றைச் செங்கற்களைப் படிபோல் அமைத்துக் கட்டுமான வேலை நடக்கிறது. சர்வஜித் ஆண்டை வரவேற்க பக்தர்கள் ஏப்ரல் 14 அன்று இங்கே லட்ச தீபம் ஏற்றவிருக்கிறார்கள். அத்தனை விளக்குகளையும் அணிவகுத்து வைப்பதற்குத்தான் இந்த கருத்துள்ள ஏற்பாடு.

**வை**த்தியநாத சுவாமி பிரதோஷ கால அலங்காரத்தில் ஜொலிக்கிறார். மின்னும் திருநீற்றுப்பட்டையும் உயரமான நாகாபரணமும் ஆவுடையாரைப்

# பூந்தமல்லி வைத்தீஸ்வரன்

என்று வேண்டிக் கொள்ளத் தோன்றுகிறது.

அழகான செப்புக் கவசம் படைத்த கொடிமரத்தைக் கடந்து திருச்சுற்றை வலம் வருகையில் நந்தவனம் செழித்து வளர்ந்திருப்பதும் பசு மடத்தில் மாடு





போர்த்திய புலித்தோல் வடிவ ஆடையும், மலர் மாலைகளும், ருத்திராட்சமும்... இந்த சுவாமியைக் கண்களிலும் மனத்திலும் இருத்திக் கொள்வது மிகச் சுலபம். அர்ச்சகர் ஒற்றை ஆளாக பெருங்கூட்டத்தைச் சமாளித்து, தீபாராதனை செய்து, திருநீற்றுப் பிரசாதம் தருகிறார். அவரே அருகில் இருக்கும் அம்பாள் சன்னிதிக்கும் ஓடோடி வந்து அர்ச்சனை செய்ய வேண்டியிருக்கிறது.

தையல்நாயகி என்ற பெயருக்கு ஏற்ப, அம்பாள் சின்னஞ்சிறு வடிவினளாக ஈசன் சன்னிதிக்கு அருகிலேயே நின்று



● லட்ச தீபத்துக்கான கட்டுமானம்



● தையல்நாயகி

கனிந்த புன்னகையுடன் நம்மை நோக்குகிறாள். "அந்த வைத்தியநாதர் மருந்தைத்தான் தருவார்; அதற்குண்டான சக்தியைப் பொதித்துத் தருவது நானல்லவா?" என்று சிரித்தபடி அவள் சொல்வதுபோல் நமக்குத் தோன்றுகிறது.

இந்த வைத்திய தம்பதியின் முதல் 'பேஷன்ட்' தேவேந்திரன் என்கிறார்கள். அவனைப் பீடித்த நோய் நீங்க இங்கே வழிபட்டதாகவும், மங்கல தீர்த்தத்தில் நீராடி ஒரு சிவலிங்கத்தை அமைத்து அவன் வணங்க, அதிலிருந்து சிவபெருமான் பிரத்யக்ஷமாகி அவன் நோயைத் தீர்த்ததாகவும் தல வரலாறு.

'பூவிருந்தவல்லி'தான் பூந்தமல்லியாக மருவியது என்பது தெரிந்திருக்கும். இவ்வூரில் நமச்சிவாய தேவர் என்ற சிவ பக்தர் தம் சீடர்களுடன் தங்கியிருந்தாராம். காலை சிவபூஜை செய்வதற்காக இவரும் சீடர்களும் ஊரிலுள்ள எல்லாப் பூக்களையும் பறித்துவிடுவார்களாம். மக்கள் கோபிக்க, நமச்சிவாய தேவர் 'இறைவனுக்காவே பறித்தேன்' என்று சொல்ல, 'அது உண்மையானால் கோயிலில் சிவலிங்கத்தின் மேல் உள்ள மாலை உமது கழுத்

துக்கு வந்து விழுமா?' என்று மக்கள் சவால்விட, தேவரும் ஈசன் முன் வந்து நின்றிருக்கிறார். ஒரு சிறுவனை சிவலிங்கத்தின் பின் அமர்த்தி மாலையின் முனைகளைப் பற்றிக் கொள்ளச் செய்தபோதிலும், நமச்சிவாய தேவரின் ஆழ்ந்த வேண்டுதலுக்குட்பட்டு அந்த மாலை இறகு முளைத்தது போல் பறந்து வந்து அவர் கழுத்தில் விழுந்திருக்கிறது!

இதுபோன்ற புராண, கர்ண பரம்பரை அற்புதங்கள், கதைகள் மட்டுமின்றி, கோயிலின் பழைமையைப் பறை சாற்றும் பதினொராம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் இங்கே காணப்படுகின்றன. 'பூவிருந்தவல்லி' என்ற பெயர் ராஜராஜ சோழன் காலத்துக் கல்வெட்டுகளிலேயே காணப்படுகிறது.

பழைமையும் பெருமையும் வாய்ந்த இத் திருத்தலத்துக்கு ஆதிசங்கரர் விஜயம் செய்ததாகச் சொல்கிறார்கள். திருச்சுற்றில் அவரது சிலை வடிவம் இருப்பதுடன் சுவாமி, அம்பாள் மற்றும் முருகனுக்கென கல்லில் செதுக்கப்பட்டுக் காணப்படும் சக்கரங்கள் இவர் ஸ்தாபித்தவை என்றும் சொல்கிறார்கள்.

**உ**டற்பிணி தீரவும் பிறவிப் பிணி தீரவும் பூவிருந்தவல்லி வைத்தீஸ்வரனை தரிசிக்கலாம். இங்கே உள்ள அங்காரகன் (செவ்வாய்), இவ்வீசனை வழிபட்டு நோய் நீங்கப் பெற்றான் என்பதால் இக் கோயிலில் செவ்வாய் கிரகம் தொடர்பான பிரச்னைகள், தோஷங்கள் தீரவும் மக்கள் பிரார்த்திக்கிறார்கள்.



• வேங்கடேச ஓதுவார்



• பிரதோஷ தீபம் ஏற்றும் பெண்கள்

ஆரம்பத்தில் சொன்னாற்போல், வாசகர்கள் ஒரு நடை அல்ல, இரு நடை வைத்தீஸ்வரன் கோயிலுக்குச் சென்று வரலாம். சர்வஜித் வருட பிறப்பன்று மாலையில் லட்ச தீபத்துக்குப் போனால் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்; மீண்டும் ஒருமுறை சாதாரண நாளில் சென்றால் நுணுக்கமான சிறப்புகளை விச்ராந்தியாக தரிசனம் செய்யலாம்.

செல்வமும் செல்வாக்கும் படைத்த நண்பர்கள் இருந்தால், கூடவே அழைத்துச் சென்று காட்டுங்கள். இந்தக் கோயிலின் கைங்கர்யத்தில் அவர்களும் ஈடுபடட்டும்.

வைத்தீஸ்வரன் கோயில் சுற்று வட்டாரத்தில் எட்டுத் திக்குகளிலும் எட்டு முக்கியமான சிவாலயங்கள் இருந்துள்ளன. அவற்றுள் ஒன்றிரண்டு நீங்கலாக மற்றவை இப்போதும் உள்ளன.

பெரும்பாலும் சுற்றுவட்டார கிராமத்து மக்களே பூந்தமல்லி வைத்தீஸ்வரன் கோயிலுக்கு வருகிறார்கள். ஆலயத்தின் வருமானம் பெருகினால் திருக்குளத் திருப்பணி நடைபெற வழி உண்டு. சின்ன வருமானத்தைக் கொண்டு பெரிய கோயிலை நிர்வகிக்க, கொஞ்சம் திணறுகிறார்கள்.

எதையும் பொருட்படுத்தாமல் வைத்தியநாதரும் தையல்நாயகியும் 'பிரிவிலா அடியாருக்கு என்றும் வாராத செல்வம் வருவித்'துக் கொண்டிருக்கிறார்கள்!

படங்கள் : ஸ்ரீஹரி

# குழந்தைகளை

டாக்டர் எல். மஹாதேவன்

குழந்தைகள் இருக்கும் வீட்டில் எப்போதும் சளி, இருமலுக்கு மருந்தைக் கையில் ரெடியாக வைத்துக் கொண்டே இருக்கும் அம்மாக்களைப் பார்த்திருப்பீர்கள். ஏதேனும் ஒரு வழியில் ஐஸ்க்ரீமோ, காய்ச்சாத தண்ணீரோ உள்ளே போய் விடும்! அல்லது தலைக்குக் குளித்த பின்பு சரியாக ஈரத்தை உலர்த்த விடாமல் குழந்தை ஓடிவிடும்...! இப்படிப் பல காரணங்களால் சளியும் இருமலும் தொடர்ந்து துரத்திக் கொண்டே இருக்கும். இதற்குக் காரணம் குழந்தைகளுக்கு அதிகமாகக் காணப்படும் கபம்தான் என்கிறது ஆயுர்வேதம். இவர்கள் இனிப்பு, பால், பால்படு பொருட்கள் போன்றவற்றை அதிகம் சாப்பிடுவதால் 'க்ஷீரபன்' என்கிறோம். இதனாலேயே இவர்களுக்கு ஒவ்வாமை மற்றும் கபத்தினால் ஏற்படுகின்ற நோய்கள் வரும் வாய்ப்புண்டு.

**கப - நோய்கள்:**

குழந்தைகளிடத்தில் கபம் அதிகமிருப்பதால் 'லாரிஞ்சைட்டிஸ்' எனப்படும் குரல்வளை அழற்சி 'டான்ஸிலைட்டிஸ்' என்கிற உள் தொண்டைக் கட்டி, சளியுடன் கூடிய மூச்சு முட்டு, மூக்கு ஒழுகுதல், அடிக்கடி ஏற்படும் ஜலதோஷம் போன்ற நோய்கள் உண்டாகின்றன. தொண்டை அழற்சி, வைரஸ் மற்றும் strepto coccus எனப்படும் பாக்டீரியாவினாலும் உண்டாகும்.

டான்ஸில்ஸ் என்பது தொண்டையின் உட்புறத்தே இருபக்கங்களிலும் உள்ள நிணநீரினாலான சதை. இது அழற்சி அடையும் வாய்ப்புண்டு. அவ்வாறானால் வீங்கி, பழுப்பு நிறமாகி, சிரமத்தைக் கொடுக்கும். தொண்டைப் புண்ணினால் சிலருக்கு மூட்டுவாதமும் சிறுநீரக அழற்சியும்கூட உண்டாகும்.

குழந்தைகளுக்கு இந்நோயினால் தொண்டை வலி ஏற்படுகிறபோது, எதையும் விழுங்கக் கஷ்டப்படும். மேலும் காது வலி உண்டாகும்! டான்ஸில்ஸ் சதை வீங்கி இருக்கும். மூக்கு ஒழுகுதல், காய்ச்சல், சளி போன்ற சிரமங்களும் இருக்கும். இதோடு நிற்காமல், கழுத்தைச் சுற்றிக் கழலைகளும் உண்டாகும். இந்த நிலையை ஆயுர்வேதம் 'கண்டமாலை' என்கிறது. ('கண்டம்' - கழுத்து)

'அடினாய்ட்ஸ்' என்பது உள்சதை வீக்கம் - அதாவது மூக்கு தொண்டையில் சேருமிடத்துக்குப் பின்புறத்தில் சற்று உயர்ந்து இருக்கும் பகுதி. நுண்கிருமியினால் ஏற்படுகின்ற அழற்சியே இதற்கும் காரணம். இவ்வீக்கத்தினால் மூக்கடைப்பு ஏற்படும். அழற்சி குணமான

பின்பு வீக்கம் சாதாரண நிலைக்குத் திரும்பி விடும்.

டான்ஸில்ஸில் ஏற்படும் சிறிதளவு வீக்கம் ஏற்றுக் கொள்ளக்கூடியதே. ஆனால், இவ்வீக்கத்தினால் குரல் மாற்றமடைந்து, தொண்டை அடைத்து, பேசும் திறன் பாதிக்கப்படலாம். மேலும் உறங்கும்போது இதன் அடைப்பால் குறட்டை போன்ற சத்தம் வரும். மூச்சு விடுவதில் சிரமம் உண்டாகும். இம்மாதிரியான அறிகுறிகள் இருந்தால் அலட்சியப்படுத்தக் கூடாது.

**ஆஸ்துமா:**

ஆஸ்துமாவால் அவதிப்படும் குழந்தைகளுக்குச் சுவாசம் செல்லும் பாதை சுருங்கி, மூச்சு விடுவதற்குச் சிரமம் உண்டாகும். ஆயுர்வேதம் இதை 'தமகஸ்வாஸம்' என்கிறது. ஐந்து வயது குழந்தைகளிடத்தில் இது அதிகமாகக் காணப்படும். ஆகையால் இவர்கள் தினமும் மருந்து உட்கொள்ள வேண்டிய நிலையில் இருப்பர். இம்மாதிரியான குழந்தைகள் ஏதேனும் விளையாட்டுப் போட்டிகளில் பங்கேற்பதற்கு முன்பு, மருந்துகளைச் சாப்பிடுவது அவசியம். இல்லாவிடில் கடுமையான மூச்சுத் திணறல் ஏற்படும்.

ஆஸ்துமா ஏற்பட பல்வேறு காரணங்கள் உண்டு. குறிப்பாக, வீட்டிலிருக்கும் தூசிகள், ஊதுபத்தி மணம், புகை, குளிர்ந்த காற்று, கடினமான உடற்பயிற்சி, மன அழுத்தம், தொண்டையில் ஏற்படும் கிருமிகள், வீட்டில் வளர்க்கின்ற பூனை போன்ற செல்லப் பிராணிகள், போர்வையில் இருக்கும் தூசி போன்றவை முக்கிய காரணிகள். சில குழந்தைகளுக்கு இரவு நேரத்தில் இருமல், மூச்சுமுட்டு அதிகமாகக் காணப்படும். விளையாடினால் இது கூடும். இரவு நேரத்தில் திணறல் தாளாமல் குழந்தைகள் எழுந்து உட்கார்ந்து கொள்வது ரொம்பப் பரிதாபமான நிலை என்றாலும் பயப்பட வேண்டியதில்லை.

**சிகிச்சை**

இம்மாதிரியான நோய் எதன் காரணமாக வருகிறது என்பதை முதலில் அறிந்து, அதனை முற்றிலுமாகத் தவிர்க்க வேண்டும்.

இருக்குமிடத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். பால், பால்படு பொருட்கள், சிப்ஸ், எண்ணெய் பலகாரங்கள், சாக்லெட் போன்றவற்றைக் கொடுக்கக் கூடாது. இரவு

# வாட்டும் கபம்!



மூல கடுத்ரயம் கஷாயம் மிகவும் சிறந்தது. நயோபாயம் எனும் குறுந்தொட்டி, ஜீரகம், சுக்குக்கஷாயம் மிகவும் சிறந்தது. துளசி, கண்டங்கத்திரி, தூதுவளை, ஆடாதோடை அதிமதுரம், கண்டு பாராங்கி, சிற்றரத்தை விஷ்ணுகிராந்தி, தாளிஸபத்தரி, மிளகு போன்றவற்றால் செய்யப்பட்ட கஷாயம் நன்மை அளிக்கும். கஸ்தூரி குளிகை, கோரோசனாதி குளிகை மிகவும் சிறந்தது. கற்பூரத் தைலத்தைச் சூடாக்கி மார்பு பகுதியில் தடவி இளஞ்சூட்டினால் ஒத்தடம் கொடுக்க, கபம் இளகும்.

கொள்ளுக் கஞ்சியைக் கொடுத்தால் கபம் இளகும். குடிநீரில் சிறிது பச்சைக் கற்பூரம், துளசி போட்டுக் கொடுத்தால் அது சிறந்த கபமிளக்கியாக (Expectorant) வேலை செய்யும். தொடர்ந்து இருமல், சளி வராமல் இருப்பதற்கு வாஸா கண்டகாரி லேகியம், அகஸ்திய ரஸாயனம் வாசிஷ்ட ஹரீதகி போன்றவற்றைக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு ச்யவனப்ராசம் கொடுக்கலாம். நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்க, நன்றாகப் பசி ஏற்பட்ட பின்பு சுக்கு, மிளகு, திப்பிலிப் பொடி சேர்த்து இரண்டு வேளை கொடுத்து வர வேண்டும். 'பிராணாயாமம்' செய்வது கண்கண்ட பலனைத் தரும். அவசரத்தேவைகளுக்கு கனகாஸவம், வாஸாரிஷ்டம், தஸமூலாரிஷ்டம் போன்றவற்றில் பூரண சந்திரோதயம் மாத்திரை சேர்த்துக் கொடுக்க, உடனே நிவாரணம் கிடைக்கும். இந்துகாந்தம் நெய்யில் சுக்குப்பொடி சேர்த்து நாள்படக் கொடுத்து வர, நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரித்து இந்நோயிலிருந்து விடுதலை பெறலாம்.

**(தொடரும்)**





**நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்க, நன்றாகப் பசி ஏற்பட்ட பின்பு சுக்கு, மிளகு, திப்பிலிப் பொடி சேர்த்து இரண்டு வேளை கொடுத்து வர வேண்டும்.**

நேரங்களில் தயிர் கொடுக்கக் கூடாது. குடிநீரைக் கொதிக்க வைத்து இளஞ்சூட்டிலேயே கொடுக்க வேண்டும். தண்ணீரில் கொத்துமல்லி, சுக்கு போட்டுக் காய்ச்சிக் கொடுக்கலாம். இரவில் சீக்கிரமாகவே சாப்பிட வைக்க வேண்டும். சூரியன் மறைந்த பின்பு எண்ணெய்ப் பலகாரங்கள், பழங்கள் கண்டிப்பாகக் கூடாது. குளிர்ந்த காலங்களில் மார்பு, காதுகளைப் போர்த்திப் பாதுகாக்க வேண்டும்; அதிகமாக எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டக் கூடாது.

இவற்றையெல்லாம்விட, குளிர்ச்சியான எந்த விஷயத்தையும் தவிர்ப்பது சிறந்தது. உச்சகட்ட மூச்சுத் திணறலுக்கு ஆயுர்வேதத்தில் உடனடி நிவாரணம் இல்லை; ஆங்கில மருத்துவமே இச்சூழ்நிலைக்குச் சிறந்தது. ஆனால், ஆரம்ப கட்ட ஆஸ்துமாவையும், சளியையும் குணப்படுத்தலாம்.

நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரித்து ஒவ்வாமையிலிருந்து விடு பட வைக்கும் மருந்துகள் இருக்கின்றன. குறிப்பாக, தச

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண்:21

சிறு குழந்தைகள் விரல் சூப்பும் பழக்கத்தை நிறுத்த எளிய, சரியான குறிப்பை எழுதி அனுப்புங்கள். சிறந்த குறிப்புக்கு முதல் பரிசாக **தன்வந்தரி டாலர்** வழங்கப்படும். இரண்டாவது பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் **'தேவமருந்து முதல் பாகம்'** வழங்கப்படும். ஆசிரியரின் தீர்ப்பே இறுதி. கடைசி நாள்: **16.04.2007**

✉ 'அந்த ஒரு வார்த்தை' சிறுகதையில் 'இந்த பூமியை யாரும் மாசுபடுத்துவதைப் பார்த்துக் கொண்டு நாம் சும்மா இருக்கக் கூடாது. ஏன்னா நமக்கு இன்னொரு பூமி கிடைக்காது' என்பது சத்தியமான வார்த்தைகள்!

**விழுப்புரம் சங்கரி ரமேஷ்**

✉ 'சபரி' பட விமர்சனம் நச். பாராட்ட வேண்டிய இடங்களில் பாராட்டி, குட்ட வேண்டிய இடங்களில் நன்றாய்க் குட்டி விட்டீரே!

**சிதம்பரம், காளிதாஸ்**

✉ தாய் - சேய் பாசப் பராமரிப்பினைத் தங்கத் தாம்பாளத்தில் தாங்கி ஜொலித்தது 'தேங்க்யூ மம்மி' இணைப்பு.

**கும்பகோணம், ரவிமதி**

# அட்டைப்படம்

# பெண்ணினத்துக்கே பெருமை!

✉ ஒரு ரூபாய்க்கு என்ன கிடைக்கும் என கேலி செய்து விளம்பரம் வரும் இக் காலத்தில், ஏழை எளிய மக்களுக்கு ஒரு ரூபாயில் மருத்துவம் செய்வது மகத்தான சேவை!

**சென்னை, லட்சுமி வாசுதேவன்**

✉ கோடைக்கு இதம் சேர்க்கும் கொடிவேரி படித்ததும் இவ்வருட கோடைச் சுற்றுலாவுக்கு அங்குதான் செல்ல வேண்டும் என்று முடிவெடுத்து விட்டோம்.

**திருவாரூர், சாந்தி**

✉ 'எல்லோர் மீதும் பூவெறிந்து கொண்டே போகிற என்மீது கூட வேலெறிந்து பார்க்கும் விளையாட்டு எதனால் நேரிடுகிறது என்று எண்ணிப் பார்க்கிறேன்' என்ற வைரமுத்துவின் மறுப்புச் செய்தி மனத்தை நெகிழ்வூட்டியது.

**சென்னை, தர்மன் பெரியசாமி**

✉ ஆத்மா ஒன்று; அதன் செயல்பாடுகள் பல என்பதற்கான காஞ்சி மகானின் விளக்கம் அமிர்தம்!

**மும்பை, உமரி.கணேசன்**

✉ 'சித்தப்பூ பார்த்த பொண்ணு' சிறுகதை 'பெண்ணினம்' பெருமைப்படும் விதத்தில் நிமிர்ந்து நிற்கிறது.

**சென்னை, கௌசல்யா சுரேஷ்**

✉ மண் குதிரைகள் இனியும் தேவையில்லை என்று எழுதியதோடல்லாமல், புதிய இளைஞர்களை அடையாளம் காட்டிய உம்மை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

**சென்னை, பாலாஜி**

'முதல்வன்' தொடர்...
அடுத்த இதழில்...



# வியாபாரி

**அன்புள்ள ரேவதிக்கு...**

எக்ஸாம் முடிஞ்சு நேத்து முதல் படமா 'வியாபாரி' பார்த்தேன். யார் ஹீரோ தெரியுமா? நீகூட திட்டுவியேடி... 'இந்தாளு படம் பார்க்கணும்னாலே அலர்ஜியாயிருக்கு'ன்னு... எஸ்.ஜே.சூர்யாதான். ஆனா, மத்த படங்கள் மாதிரி இல்லாம இதுல ரொம்ப அடக்கி வாசிச்சிருக்காரு.

பில்கேட்ஸைவிட அதிகமா சம்பாதிக்கணும் இதுதான் சூர்யாவோட லட்சியம். குறுக்கே வர்ற பந்தம், பாசம் எல்லாத்துக்கும் தடா போடணும். என்ன பண்றாரு? க்ளோனிங் மூலமா இன்னொரு சூர்யாவ உருவாக்கி, பாசத்துக்கு நிழலையும் பணத்துக்கு நிஜத்தையும் அதிபதியாக்கறார். பணமா, பாசமா...? கடைசில எது ஜெயிக்குதுங்கறதுதான் கதை.

பாசக்கார நடிப்புல சூர்யா வெளுத்து வாங்கறாரு. அம்மா சென்ட்டிமெண்ட் நல்லா ஒர்க் அவுட் ஆகியிருக்கு. மூணு நாயகிங்க. தாம்னா மட்டும்தான் தேறுறாங்க. சீதா சிறப்பா நடிச்சிருக்காங்க. அம்மான்னா சும்மா இல்லடான்னு நிருபணமாகியிருக்கு. நாசரும் புகுந்து விளையாடி இருக்கார். ஆனா, குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய நபர் பிரகாஷ்ராஜ். ரெண்டே சீன்ல வந்தாலும் நெஞ்சை நனைச்சுப் புடறாரு. வடிவேலு வெறிநெடிவேலு.

நம்ம தமிழ் டைரக்டர்களுக்கு மட்டும் எப்படி இப்படியெல்லாம் ஐடியா தோணுதுன்னு சிலிர்ப்பா இருக்கு. இன்னும் நீட்டா திரைக்கதையத் தந்திருக்கலாம் ஷக்தி சிதம்பரம். தேவா இசையில் அம்மா பாட்டு கேக்க நல்லாயிருக்கு. எம்.வி.பன்னீர்செல்வத்தோட ஒளிப்பதிவு டச்சிங்.

என்னடி, போரடிக்குதா? சரிசரி, ஒரே ஒரு விஷயத்தை மட்டும் சொல்லிட்டு நிப்பாட்டிடறேன். சிரிப்பும் சிந்தனையும் கலந்த கலவைதான் வியாபாரி. உன் பார்வைல இந்தப் படம் எப்படியிருக்குன்னு பார்த்துட்டு பதிலெழுது! ரவி, செளம்யாவை நான் கேட்டதா சொல்லு!

இப்படிக்கு,

என்றும் அன்புடன்

**லஜ்ஜாவதி**

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

15.4.2007
இதழுடன் இணைப்பு
16 பக்கங்கள்








# அட...மழை!
# பரிசு மழை!

## லட்ச ரூபாய் பரிசு ஸ்பெஷல்

கலந்துக்கோங்க... கலக்குங்க...
ஆல் தி பெஸ்ட்!



சர்வஜித் தமிழ் புத்தாண்டு கோலாகலமாகத் தொடங்குவதை முன்னிட்டு கல்கி வாசகர்களுக்கு லட்ச ரூபாய் பரிசுப் போட்டிகளை ஜேஜேன்னு அறிவித்துக் கொண்டிருக்கிறோம். கடந்த மூன்று வாரங்களாக உங்கள் கல்கியில் இடம் பெற்ற போட்டி- 1ன் மூன்று பகுதிகளையும் நிரப்பி சூப்பர் ஹீரோ சூர்யாகிட்ட கேட்க வேண்டிய கேள்வியையும் ரெடியா வைச்சிருப்பீங்க. அதன் தொடர்ச்சியா இந்த தமிழ் புத்தாண்டு சிறப்பிதழில் மற்ற போட்டிகள் அணி வகுப்பு...

போட்டியில் கலந்துக்கோங்க, கலக்குங்க!

# சில்லுனு ஓர்

# சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 2

குடும்பமா, இல்ல ஃப்ரண்ஸ்லோட ஜாலியா டூர் போயிருப்பீங்க, இல்லியா? அங்க நீங்க இப்பவும் நினைச்சு நினைச்சுப் பார்த்து சிரிக்கிற, மகிழ்கிற சம்பவங்கள் நடந்திருக்கும்தானே? அந்த அனுபவங்களை உங்க கல்கியில ஒரு பக்கத்துக்கு மிகாம வர்ற மாதிரி எங்களுக்கு எழுதி அனுப்புங்க! சிறந்த அனுபவங்களுக்கு சில்லுனு ஒரு பரிசு!

இரண்டு பேருக்கு முதல் பரிசாக குளுகுளு ஃப்ரிட்ஜ், ஐந்து பேருக்கு ஆறுதல் பரிசு. பிரசுரத்துக்குத் தேர்வாகும் உங்க அனுபவம் கல்கி வார இதழ்ல இடம் பெறும். பரிசோ வீடு வந்து சேரும்.

ரெடி.... ஒன்... டூ... த்ரீ...



**மறக்காதீங்க!!**

- ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
- போட்டி கூப்பனை இணைத்து அனுப்பவும்.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- கடைசி தேதி 18.4.2007

# அனுபவம்!

## சில்லுனு ஓர் அனுபவம்! சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 2

பெயர் : ..........................................................

முகவரி : ..........................................................

..........................................................

..........................................................

தொலைபேசி : ..........................................................

இ.மெயில் : ..........................................................

**மேஷம் :** முதல் ஆறு மாதங்கள் வேலைப் பளு அதிகரிக்கும். இருக்கும் இடம் வீடு வாசல் மாற்றி அமைக்க நேரிடும். நிதி நிலைமை சற்று மந்தமான சூழ்நிலை உண்டாகும். சிலருக்கு மக்கள் மனைவியை விட்டு விலகி வாழ நேரிடும். மாணவர்கள் அதிக சிரமப்பட்டு படிக்கும் சூழ்நிலை உருவாகும். கலைஞர்களுக்கு இந்த வருடத்தின் பிற்பகுதி நல்ல முன்னேற்றம் காண்பிக்கும். விவசாயிகளுக்கு சாகுபடியில் சற்று நஷ்டங்கள் வந்தாலும் பிற்பகுதி நல்ல பலனை அளிக்கும். பங்குமார்கெட் உள்ளவர்கள் ஏற்றத் தாழ்வுகளைச் சந்திக்க நேரிடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம். கல்வி வளம் மேலோங்கும். எதிலும் தடைகள் விலகி நல்ல முன்னேற்றம் ஏற்படும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரர் விளக்கு ஏற்றி நவக்கிரஹத்தை ஒரு முறை வலம் வரப் பீடைகள் விலகி நற்பலனை அடைய முடியும்.

# தமிழ்ப் புத்தாண்டு

**ரிஷபம் :** நிதி நிலைமை உயர்வு பெறும். வேலைவாய்ப்பில் ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். எதிர்பார்க்கும் துறையில் கல்வி வளம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். புதிதாகத் தொழில் தொடங்குவோருக்கு நல்ல சலுகைகள் கிட்டும். குடும்பப் பெண்களுக்கு நல்ல காலம் சித்திக்கும். எதிலும் அகலக் கால் வைக்காமல் பார்த்துச் செயல்பட்டு வந்தால் நற்பலனை அடையலாம். இந்தக் கால கட்டத்தில் கொடுக்கல், வாங்கலில் அதிக கவனம், விழிப்புணர்வுடனும் செயல்பட்டால் இமையிலிருந்து காப்பாற்றிக் கொள்ளலாம். சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் கோயிலுக்குச் சென்று ஆஞ்சநேயர் சுவாமியை வழிபட்டுத் தீபம் ஏற்றி வரவும். வியாழக்கிழமை தோறும் ராகவேந்திர சுவாமியை வழிபட்டுத் தீபம் ஏற்றி வரவும். கஷ்டங்களிலிருந்து விடுதலை கிடைக்கும்.

**மிதுனம் :** இந்த வருடத்தின் முதல் 6 மாதங்கள் சற்று சுமாரான பலனை அளிக்கும்.மனத்தில் தைரியமும் உற்சாகமும் வந்து சேரும். வராத நிலுவைகள் வந்து சேரும். கொடுக்கல், வாங்கலில் இருந்து வந்த சிரமங்கள் மாறி பணப்புழக்கம் மேலோங்கும். கல்வி வளம் அமையும். வேலையில் ஊதிய உயர்வு, பணிமாற்றம் ஏற்படும். பணக்கஷ்டம் விலகும். திருமண காரியம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். கலைஞர்களுக்கு ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். சொந்தத் தொழில் நடத்துபவர்களுக்கு வாழ்வில் மகிழ்ச்சி உண்டாகும். பங்கு மார்க்கெட் துறையில் உள்ளவர்கள் திடீர் தன சேர்க்கை பெறுவார்கள். ஆபரணப் பொருள்கள் சேர்க்கை உண்டாகும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வரருக்கு எள்ளுமுடிச்சுப் போட்டு அகல்விளக்கு ஏற்றவும்.

**கடகம்** : நன்மையும் தீமையும் கலந்த வருடம். கைப்பொருள்மீது கவனம் தேவை. வேலை செய்யும் இடத்தில் எச்சரிக்கையாக இருக்கவும். வியாபாரத்தில் ஏற்றத் தாழ்வு இருக்கும். ஏற்றுமதி / இறக்குமதி செய்பவர்கள் அதிக கவனத்துடன் செயல்பட்டால் நஷ்டத்திலிருந்து விடுபடலாம். பங்கு மார்க்கெட் தொழில் செய்பவர்கள் இன்வெஸ்ட் பண்ணும்போது எச்சரிக்கையாக இருக்கவும். மாணவ மாணவிகள் படிப்பில் அதிக கவனம் செலுத்தவும். எதிலும் போட்டி போட்டு வெற்றி பெறும் சூழ்நிலை உருவாகும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். இதற்குப் பரிகாரமாக வியாழன்தோறும் ராகவேந்திர சுவாமியையும் சனி தோறும் ஆஞ்சநேயரை வழிபடவும். செவ்வாய்க் கிழமை கேதுவுக்கும் வெள்ளிக்கிழமை ராகுக்கும் விளக்கு ஏற்றவும். ஆபத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.

# ராசி பலன்கள்!

**சிம்மம்** : உங்களுக்கு இந்த வருடத்தின் முதல் 6 மாதங்கள் சற்று சுமாரான காலமாக இருக்கும். திருமணம் கைகூடும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். கல்வி வளம் மேன்மை அடையும். எதிலும் போராடி வெற்றி வாகை சூடுவீர்கள். எழுத்து, பத்திரிகைத் துறை நல்ல பலனை அளிக்கும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு உண்டாகும். உழைப்புக்கு ஏற்ற பலன் கிடைக்கும். பணிமாற்றம் உண்டாகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் உண்டாகும். வாகன வழியிலும் ஆதாயம் கிட்டும். குழந்தை பாக்கியம் உண்டாகும். தொழில்துறையில் நல்ல மாற்றங்களை எதிர்பார்க்கலாம். வியாழன் தோறும் குருவுக்கு விளக்கு ஏற்றலாம். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயருக்கு விளக்கு ஏற்றலாம். செவ்வாய் / வெள்ளி நவக்கிரஹ வழிபாடு செய்து வர, நற்பலனை அளிக்கும்.

**கன்னி** : உங்களுக்கு இந்த வருடத்தின் ஆரம்பமே நல்ல யோகமான ஆண்டாக இருக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். மாணவ, மாணவிகள் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்று, விரும்பிய துறைக்குப் போவார்கள். தடை விலகித் திருமணம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். புதிய வீடு / வாகனம் வந்து சேரும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். கலைஞர்களுக்கு நல்ல காலம். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி உண்டாகும். தொழில் துறையில் இடமாற்றம் ஏற்படும். பின் வரும் 6 மாதங்களில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும். வியாழக்கிழமை தோறும் ராகவேந்திரர் சுவாமியை வழிபட்டுத் தீபம் ஏற்றி வரவும். சிரமமான கால கட்டத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.

**துலாம் :** உங்களுக்கு இந்த வருடத்தில் முதல் 6 மாதம் நற்பலனை அளிக்கும். இந்தச் சமயத்தில் வீட்டில் சுபகாரியம் கைகூடும். குடும்பத்தில் இருந்து வந்த குழப்பங்கள் நீங்கும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். கொடுக்கல், வாங்கலில் நல்ல பலனை அளிக்கும். ஆடை ஆபரண பொருட்கள் வாங்கும் வாய்ப்பு உண்டாகும். சொந்த தொழில் நடத்துபவர்கள் நல்ல பலனை அடைவார்கள். எதிர்ப்பு, தொல்லை விலகும். குரு மாற்றம் சற்று பிற்போக்கான சூழ்நிலையை உண்டாக்கும். அந்தக் காலகட்டத்தில் சற்று நிதானத்துடன் செயல்படவும். வியாழன் தோறும் குரு பகவானை வழிபட்டுத் தீபம் ஏற்றி வந்தால் கஷ்டங்களிலிருந்து விடுதலை ஆகும். செவ்வாய் / வெள்ளிக் கிழமை ராகு / கேது வழிபாடு செய்து வரவும். தீமைகள் விலகும்.

**விருச்சிகம் :** ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். எண்ணிய எண்ணங்கள் யாவும் ஈடேறும். கல்வியில் மேன்மை உண்டாகும். கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். ஊதிய உயர்வு கிட்டும். வெளிநாட்டில் இருக்கும் நண்பரால் ஆதாயம் கிட்டும். ஏற்றுமதி, இறக்குமதி தொழிலில் நல்ல வருவாய் கிட்டும். பங்கு மார்க்கெட்டில் தொழிலில் நல்ல வருவாய் கிட்டும். புதிய தொழிற் சாலைகள் கட்ட நேரிடும். கலைஞர்களுக்கு ஏற்றம் உண்டாகும். அச்சுத் துறை, கலைத்துறை சேர்ந்தவர்களுக்கு நல்ல வருவாய் கிட்டும். பூர்வீகச் சொத்துகள் நல்ல விலைக்குப் போகும். பெண்களுக்கு ஆடை, ஆபரணப் பொருள் சேரும். மனசலனம் விலகும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வருதல் நலம் தரும். செவ்வாய்/ வெள்ளிக் கிழமை ராகு/கேது வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**தனுசு :** முதல் 6 மாதத்தில் சற்று சோதனைகளாக இருக்கும். பிறகு சாதனை படைப்பீர்கள். உடல் ஆரோக்கியம் சீராகும். களவுபோன பொருள் திரும்ப கிடைக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மகான்களைச் சந்திக்கும் வாய்ப்பு வந்து சேரும். வேலைப் பளு குறையும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வார்கள். கலைஞர்கள் வாழ்வில் ஏற்றம் காண்பிக்கும். ஆஞ்சநேயர் துளசிமாலை சாற்றித் தீபம் ஏற்றவும். வியாழன் தோறும் குருபகவானுக்கு விளக்கேற்றி ஓர் ஏழைக்கு அன்ன தானம் செய்யவும். குஷ்டரோகிக்கு உங்களால் முடிந்த அளவு தர்மம் செய்யவும்.

**மகரம்** : ரொம்பவும் பொறுமையும் நிதானமாகச் செயல் பட்டால் கஷ்டங்களிலிருந்து விடுதலை பெறலாம். வாகனத்தை கையாளும்போது கவனம் தேவை. எதிர்பாராத விபத்துகள் ஏற்படும். குடும்ப வழியில் கணவன் மனைவி உறவு நலமாக இருக்கும். மௌனமாக இருந்து வேலையைச் சாதித்துக்கொள்ள வேண்டும். உடல்நிலையில் போதிய கவனம் தேவை. உத்தி யோகத்தில் வேலைபளு அதிகரிக்கும். அவசரப்பட்டு வேலை மாற வேண்டாம். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை இருக்கும். திருநள்ளாறு சென்று சனீஸ்வரனை வழிபட, திருநாகேஸ்வரம் சென்று ராகு / கேது வழிபாடு செய்தல் நலம்.

**கும்பம்** : எதிர்பார்க்கும் காரியம் நிறைவேறும். மறைமுக எதிர்ப்பு, தொல்லை விலகும். உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படாது. புதிய கடன்பட்டு வீடு மனை வாங்க நேரிடும். மனசோர்வு நீங்கும். தூர தேச அழைப்பு கிட்டும். தரித்திரப் பீடை நீங்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். கலைஞர்களுக்குப் பொற்காலம். செலவுகள் சுபமானதாக இருக்கும். ஷேர்மார்க்கெட் தொழில் நல்ல பலனை அளிக்கும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். வீட்டில் இருக்கும் நேரம் குறையும். சிலர் மனைவி விட்டு வேறு ஊருக்கு மாறுதலாகிப் போக நேரிடும். சகோதரனால் நற்பலன் கிட்டும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வரவும். செவ்வாய் / வெள்ளி தோறும் ராகு / கேது வழிபட்டு வரவும்.

**மீனம்** : இந்த வருடம் ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். இந்த வருடத்தில் வரும் சனி பெயர்ச்சி, குருப் பெயர்ச்சி சாதகமாக விளங்குகிறது. உல்லாசப் பிரயாண வாய்ப்பு, வந்து சேரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். நீண்ட கால கடன் தொல்லை விலகும். எதிர்ப்புகள் நீங்கும். தூர தேச அழைப்பு கிட்டும். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். கொடுக் கல், வாங்கல் நன்றாக இருக்கும். வழக்கில் வெற்றி அளிக்கும். அச்சுத்துறை, புகைப்படத் துறை, தகவல்துறையைச் சேர்ந்தவர்கள் நல்ல பலனை அடைவார்கள். சுப நிகழ்ச்சி நடக்கும். வேலை மாற்றம் ஏற்படும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் கோயிலுக்குச் சென்று ஆஞ்சநேயருக்குத் தீபம் போடவும்.

## சிவாஜி - ஹைக்கூ போட்டி!

தமிழ் புது வருஷத்துக்கு எதிர் பார்த்த சிவாஜி மே மாதம் திரைக்கு வராரு. அதுக்கு முன்னாடி சிவாஜி ஆடியோ ரிலீஸாகி சக்கைப்போடு போட்டுக்கிட்டிருக்கு.

ஏ.ஆர்.ரஹ்மான் மியூசிக்ல எல்லா பாடல்களும் ஒஹோன்னு இருக்குன்னாலும், குறிப்பா 'சஹானா' பாட்டைக் கேட்டுட்டு உங்க கருத்தை அழகா சின்ன ஹைக்கூவா வெள்ளைத் தாளில் எங்களுக்கு எழுதி அனுப்புங்க.

முதல் பரிசு வாஷிங் மெஷின் மூன்று பேருக்கு!

ஆறுதல் பரிசு பத்து நபருக்கு!

**மறக்காதீங்க!!**

* ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. * போட்டி கூப்பனை இணைத்து அனுப்பவும்.
* ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* கடைசி தேதி 18.4.2007

# உங்கள் பார்வையில் சி..சி.




## உங்கள் பார்வையில் சி.சி.சிவாஜி! சர்வஜித் பரிசுப் போட்டி எண் –3

பெயர் : ........................................................................................................

முகவரி : ........................................................................................................

........................................................................................................

........................................................................................................

தொலைபேசி : ........................................................................................................

இ.மெயில் : ........................................................................................................




"சர்வஜித் ஆண்டில் உங்களின் வெற்றி இலக்காக எதையெல்லாம் நிர்ணயித்து இருக்கிறீர்கள்? அல்லது 'வெற்றி' என்ற வார்த்தைக்கு எதை அர்த்தமாகச் சொல்வீர்கள்?"

இப்படி ஒரு கேள்வியுடன் நமது வாசகர்களுக்கு திடீர் இன்ப அதிர்ச்சி அளிக்கும் வகையில் அவர்களின் தொலைபேசி எண்களுக்கு டயலினோம்.

"என்னது கல்கியில இருந்தா? ஹலோ இது ஏப்ரல் ஃபூல் விஷயம் இல்லையே?" என்று முதல் வாசகரே சர்வ உஷாருடன் கேட்டார். நிஜம்தான் என்று விளக்கிய பிறகே பேசினார். **ஆர்.சுப்பிரமணியன்,** சென்னை தி.நகரைச் சேர்ந்தவர்.

"தம்பி நான் ஒரு சீனியர் சிடிசன். எனக்கு எழுபத்தெட்டு வயசாகுது. இதய நோயினால் அவதிப்பட்டு அறுவை சிகிச்சை செய்து கொண்டவன். ஆபரேஷனுக்கு முன்னாடி ரொம்ப பயமா இருந்தது. பத்திரிகைகளில் படிச்ச டாக்டர்ஸ் ஜோக்கெல்லாம் அப்பத்தான் ஞாபகத்துக்கு வந்தது. நாம அவ்வளவுதான்னு கூட நினைச்சேன். ஆனா இப்போ ஆபரேஷன் நல்லபடியா முடிஞ்சு ரொம்ப நார்மலா இருக்கேன். அப்புறம்தான் ஒரு ஐடியா தோணுச்சு. என்னைப் போல ஆபரேஷன் செய்துக்கப் போறவங்களை சந்திச்சு, அவங்களோடு அன்பா பேசி, பயத்தை போக்கறேன். ஏதோ என்னால முடிஞ்ச சின்ன சேவை. இந்த வெற்றி இனியும் தொடரணும். இதுதான் என்னோட ஆசை" என்றார்.

அவரது 'உயர்ந்த ஆசை'க்கு வாழ்த்தை தெரிவித்துவிட்டு அடுத்தவரைப் பிடித்தோம்.

"என்னோட பேர் **விமலா வேணுகோபால்.** நாங்க இருக்கறது விருத்தாசலம் மாவட்டத்திலுள்ள கிழபாளையூர். இது

ஒரு கிராமம். இங்குள்ள மக்களில் பல ருக்கு பொது சுகாதாரம் பற்றிய விழிப் புணர்வு இல்லை. அதைப் புரிய வைக்க பஞ்சாயத்து போர்டுல பேசி சில பணி களைச் செய்துட்டு இருக்கோம். எங்க ஊர் மக்கள் முழு விழிப்புணர்வு பெற ணும். அதுதான் இந்த சர்வஜித் ஆண் டுல நாங்க அடையற வெற்றியா இருக் கும்'' என்றார்.



**ந**மது தொலைபேசி வலையில் அடுத்து சிக்கியவர் கோவையைச் சேர்ந்த **எஸ்.சீனிவாசன்.** திருக்குறள் போல் 'நச்'சென இரட்டை வரியில் தனது பதி லைச் சொன்னார் :

''மனசோட திருப்திதான் வெற்றி. இதுபோதும், எனக்கு சந்தோஷம்னு மனசு நினைச்சுட்டா அங்கே வெற்றி வந்துடுது.''

# மீது வெற்றி!

**மீ**ண்டும் சென்னை இப்போது எதிர் முனையில் பேசியது ஒரு கல்லூரி மாணவி. பெயர் **என்.ஐஸ்வர்யா.** நங்கநல்லூரைச் சேர்ந்தவர்.

''பயம்தான் சார் நம்மோட முதல் எதிரி. நான் இப்ப பி.காம். படிச்சுட்டு இருக்கேன். சி.ஏ. படிச்சு ஜெயிக்கறது தான் என்னோட எய்ம். இதைச் சொன்னதும் ஃப்ரெண்ட்ஸ், அக்கம் பக்கமெல்லாம் 'ஐயையோ! அது ரொம்ப கஷ்டம். முடியவே முடியாது' அப்படி இப்படின்னு பயமுறுத்தினாங்க. ஆரம் பத்துல நானும் பயந்துட்டேன். அப்புறம் தைரியமா இறங்கினேன். இப்ப பி.காம். படிச்சுகிட்டே சி.ஏ.யும் முடிக்கப் போறேன். எந்த விஷயமா இருந்தாலும் துணிவா இறங்குங்க. துணிவே பாதி வெற்றியைத் தந்துடும்'' என்று கூறி நம்மை அசர வைத்தார்.




மேலும் சில வாசகர்களுடன் தொடர் புக் கொண்டதன் மூலம் ஒரு விஷயம் தெளிவானது. கல்கி வாசகர்கள் எல்லோரிடமே ஒரு சமூக நோக்கு, துணிவு, வாழ்க்கையை தைரியமாக எதிர்கொள்ளும் தெளிவு பளிச்சிடுகிறது. இந்த மூன்றும் இருந்தால் எப்போதும், எல்லாவற்றிலும் வெற்றி நிச்சயம்.

வாழ்த்துகள் வாசகர்களே!

- யுவா

சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 4

# டியர் யூத்ஸ்!



**படிக்கும் வயதில் காதலிக்கலாமா?**

இளைஞர்களே! இதோ உங்கள் சிந்தனையைத் தூண்ட 'கட் அன்ட் ரைட்டா' நறுக்குனு ஒரு கேள்வி கேட்கிறார் இசையமைப்பாளர் பரத்வாஜ்.

உங்க மனசுல தோன்றினதை நீங்க 'பளிச்'னு 10 வரிகளுக்கு மிகாமல் எழுதி அனுப்புங்க. சிறந்த கருத்துகளை எழுதியனுப்பும் நான்கு யூத்ஸுக்கு மெகா பரிசா ஆடியோ சிஸ்டம் தரப்படும். அது மட்டுமா? பரத்வாஜை சந்திச்சுப் பேசலாம் கண்ணுங்களா! ஜாலிதானே! இன்னொண்ணு, ஐந்து நபர்களுக்கு ஆறுதல் பரிசும் வழங்கப்படும். மறக்காம உங்க புகைப்படத்தை இணைத்து அனுப்புங்க!

**சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 4**

பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

தொலைபேசி : ........................................

இ.மெயில் : ........................................

**மறக்காதீங்க!!**

* ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
* போட்டி கூப்பனை இணைத்து அனுப்பவும்.
* ஆசிரியின் தீர்ப்பே இறுதி.
* கடைசி தேதி 18.4.2007

**இந்த தமிழ் புத்தாண்டு எப்படி அமையும் என்று சில வி.ஐ.பி.க்களிடம் கேட்டோம். தங்கள் எதிர்பார்ப்புகளைக் கூறினார்கள். இதோ...**

இந்தப் புத்தாண்டு உலகம் முழுக்க புத்துணர்ச்சியை வழங்கும் ஆண்டாக இருக்கும். சின்னத்திரையில் பல மாற்றங்கள் உருவாகும். சீரியல்களில் முந்நூறு எபி சோடுகளிலேயே நல்ல கதைகள் வரும். எனது இன்னொரு பரிமாணமாக நல்ல இயக்குநராகவோ, நல்ல படைப்பாளியா கவோ வெளிப்படுவேன். சின்னத் திரை களில் நிறைய கேம் ஷோக்கள், குறும் படங்கள், ஆவணப் படங்கள் வரும்.



• அபிஷேக்

# பொங்கட்டும்; தங்கட்டும் மகிழ்ச்சி!



• தாமரை

படம் : ஸ்ரீஹரி

தமிழ்ப் புத்தாண்டோ, ஆங்கிலப் புத்தாண்டோ நான் இந்த விஷயம் இப்படித்தான் நடக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதில்லை. எல்லா நாட்களும் நல்ல விஷயங்களே நம்மைச் சுற்றி நடக்கும் - நமது சிந்தனைகள் நல்லவையாக இருந் தால். தமிழ்த் திரைப்பாடல் துறை யில் இந்த வருடத்தில் என்றில்லா மல், எல்லா நாட்களிலும் எல்லா வருடங்களிலும் நல்ல பாடல்கள் வரவேண்டும். குறிப்பாக, இளைய சமுதாயத்தைப் பாதிக்காத, யார் மனத்திலும் அருவருப்பை ஏற்படுத்தாத நல்ல கருத்து களைக் கொண்ட பாடல்கள் வர வேண்டும் என்பதுதான் புத் தாண்டில் மட்டுமல்ல, எப் போதும் என்னுடைய எதிர் பார்ப்பு!

# சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 6

கல்கி 15.4.2007 இதழில் நான்கு புதிய தொடர்களை ஆர்ப்பாட்டமாக ஆரம்பித்துள்ளோம். அதில் ஒரு தொடரில் இரு மேல்நாட்டு அறிஞர்கள் பொன்மொழிகளைக் கூறியுள்ளார்கள். அந்த பொன்மொழி எந்தத் தொடரில் என்ன விஷயத்திற்காக எழுதப்பட்டவை என்பதைக் கண்டுபிடித்து அனுப்புங்கள். அதேமாதிரியான, உங்களுக்குத் தெரிந்த மூன்று பொன் மொழிகளை எழுதி அனுப்புங்கள். குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்படும் ஆறு பேருக்கு அழகிய பரிசுகள் உண்டு.

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

தொலைபேசி : ..............................

இ.மெயில் : ..............................

**மறக்காதீங்க!!**

- ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
- போட்டி கூப்பனை இணைத்து அனுப்பவும்.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- கடைசி தேதி 18.4.2007

சர்வஜித் தமிழ்ப் புத்தாண்டில் எல்லா வளங்களும் பொங்கி மகிழ்ச்சி எங்கும் தங்கும் என்று மனமார நம்புகிறேன். இந்த வருடத்திலாவது எல்லா மக்களும் 'நான் முன்னேறணும்' என்று நினைப்பதைவிட 'இந்தச் சமூகம் முன்னேற வேண்டும்' என்று எண்ண வேண்டும். எல்லா வளங்களும் இந்தியாவுக்குள் வந்து கொண்டிருக்கின்றன. நம் மக்கள் இயற்கையை மாசு படுத்தாமல் அதனை நல்ல முறையில் பராமரிக்க வேண்டும் என்ற எண்ணத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். மனித நாகரிகமென்பது பொருளாதார வளர்ச்சியில் மட்டுமில்லை; சுத்தமான, சுகாதாரமான சூழ்நிலையிலும் உண்டு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தத் தமிழ் புத்தாண்டிலிருந்து பதிப்பகத் துறை நிச்சயமாக சிறந்த முன்னேற்றத்தை அடையும். காரணம், கோவை, மதுரை, சேலம், ஈரோடு, திருநெல்வேலி மாவட்டங்களில் வருடந்தோறும் புத்தகக் கண்காட்சி நடத்தப்படும். இதற்கு அரசின் ஆதரவு எப்போதும் இருக்கும். அந்த ஆதரவே எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி, நம்பிக்கை.



படம் : ஸ்ரீஹரி

• காந்தி கண்ணதாசன்

# சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 5



எல்லாருக்கும் போட்டி எங்களுக் கில்லையான்னு நீங்க கேட்டது எங்க காதுல விழுந்துருச்சு. அதனால இந்த ஸ்பெஷல் போட்டி உங்களுக்கு மட்டுமே! சித்திரை நாளில் மாங்காய், வெல்லம், வேப்பம்பூ கலந்து கொடுப்ப தன் அர்த்தம் உங்களுக்குத் தெரியும்.

உங்கள் வாழ்க்கையிலும் சந்தோஷம், சோகம், அதிர்ச்சி கலந்த அனுபவங்கள் பல நேர்ந்திருக்கும். பத்து வரிகளுக்கு மிகாமல் உங்க அனுபவங்களை கல்கிக்கு அனுப்புங்க.

ஐந்து பேருக்கு ரொம்ப உபயோக மான பரிசுப் பொருள் காத்துக் கிட்டிருக்கு! பரிசு என்னங் கறது சஸ்பென்ஸ்!

ரெடி ஜூட் ஒன்... டு... த்ரீ...

# லேடீஸ் ஸ்பெஷல்!



**மறக்காதீங்க!!**

* ஜெராக்ஸ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. * போட்டி கூப்பனை இணைத்து அனுப்பவும்.
* ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* கடைசி தேதி 18.4.2007

**லேடீஸ் ஸ்பெஷல்', சர்வஜித் பரிசுப் போட்டி எண் – 5**

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

தொலைபேசி : ..............................

இ.மெயில் : ..............................

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under
PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 15.4.2007

# புத்தாண்டு வாழ்த்துகள்!



தித்திப்பு... இனிப்பு... உவப்பு... இதைச் சொல்வதுதான் இந்த வெல்லக் கட்டி. இந்த இனிப்பைப் போல் இந்தப் புத்தாண்டு முழுக்க சந்தோஷமும் நிம்மதியும் எல்லார் மனங்களிலும் எல்லாவிடங்களிலும் தங்கட்டும்.

வேப்பம்பூ... கசப்பு... ப்பூ... என்று தள்ளாமல் வாழ்க்கையில் கசப்பும், அனுபவிக்க வேண்டிய அழகிய உணர்வுதான் என்பதை நமக்கு சொல்லவே சித்திரை முழுதும் பூத்துக் குலுங்குகிறது. கசப்பான அனுபவங்கள் தரும் பாடங்களில் வாழ்க்கையின் மிக முக்கியமான கருத்துகளையெல்லாம் உள்ளிழுத்துக் கொள்ளவேண்டும்.





புளிப்பு... சுவைகளில் எல்லாராலும் விரும்பிச் சுவைக்கப்படுகின்ற சுவை. தினசரி வாழ்க்கை - ஒரே மாதிரியான வாழ்க்கை - புளித்துப் போகாமல் இருக்க மனத்தை ஒவ்வொரு நிமிடமும் புத்துணர்வோடு வைத்திருக்க வேண்டும்.

இதனைச் சொல்லவே சித்திரை நமக்கு இம்மூன்றையும் இந்தப் பருவத்தில் அள்ளிக் கொடுக்கிறது.

**வாழ்த்துவோம்! வாழ்வோம்!!**
**இனிய தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துகள்!!!**

தொகுப்பு : **சுகந்தி ஜி.பாரதி**
ராசிபலன் : **தஞ்சை பரத்வாஜ்**

